Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G6-TN-MS (O) P.P. 55

**மேல் நிலை**

ஒரு மணி நேரமாவது பொது நன்மைக்குச் செலவிடுவதென்று உறுதி கொண்ட ஓர் ஆயிரம் பேர் தம் உழைப்பைத் தந்தால் சமூகம் மேல் நிலை அடைவது உறுதி.



-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**வாரிசு**

என் வாரிசு ஏதென்றால், என் கொள்கைகளும் கருத்துக்களும் தான் வாரிசேயொழிய பிறிதொன்றுமில்லை.

-தந்தை பெரியார்

மலர்: 8 சென்னை 20-7-1984 வெள்ளி வெளியீடு 21-7-1984 சனி இதழ்: 274

★ கட்டிய வீட்டுக்கு குறை கூறுபவர் கருணாநிதி

★ மேடையில் குற்றம் கூறுபவர்கள் வழக்கு மன்றம் வர மறுப்பதேன்?

# என்மீது குற்றம் கூறுபவர் ஆதாரம் இருந்தால் நீதிமன்றம் வந்து நிரூபிக்கத்தயாரா?

## முதல்வர் புரட்சித்தலைவர் சவால்

தேனி, ஜூலை 20- பொது மேடைகளில் குற்றங்களைக் கூறும் கருணாநிதியை வழக்கு மன்றத்திற்கு வாருங்கள் என்றால் வரமறுக்கிறார். என் மீது குற்றம் கூறுகிறவர் ஆதாரம் இருந்தால் வழக்கு மன்றம் வந்து நிரூபிக்கத் தயாரா என்று முதல்வர் புரட்சித்தலைவர் கேட்டார்.

தேனி தொகுதி தாடிசேரியில் சமமட்ட கால்வாய் திட்டம் தொடக்க விழா நடைபெற்றது. முதல்வர் புரட்சித் தலைவர் இந்த நிகழ்ச்சியில் பங்கேற்று "தந்தை பெரியார் சமமட்டக் கால்வாய் திட்டம்" எனஇத்திட்டத்திற்கு பெயர் சூட்டி தொடங்கி வைத்தார்.

அமைச்சர் ஆர். கே. ப் தலைமையிலும், ஜெயராமன் எம்.எல் ஏ வரவேற்பிலும் நடைபெற்ற இந் நிகழ்ச்சியில் அமைச்சர் காளிமுத்து, சேடபட்டி முத்தையா எம் எல் ஏ, கோபால் எம் எல் ஏ, ஜக்கையன் எம்.பி. ஆகியோர் பேசினர்.

விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசுகையில் கூறியதாவது:-

இந்தக் கால்வாய் வெட்டப்படுவதால் 3177 ஏக்கர் நிலம் புதிய பாசன வசதி பெறுகிறது இதன் மூலம் அரிசி உற்பத்தியும் 7 ஆயிரம் முதல் 8 ஆயிரம் டன் வரை கூடுதலாக இருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. இதன்மூலம் வேலை வாய்ப்பும் பெருகும்.

எங்களைப் பொறுத்த வரையில் நாங்கள் செய்ததைச் சொல்கிறோம். விளம்பரத்துக்காக எதையும் செய்யவில்லை. எங்கள் ஆட்சியில் எதுவும் செய்யவில்லை என்று கூறுவோர்களுக்கு பதில் கூறவே சொல்கிறோம். தேர்தல் வாக்குறுதிகளை நாங்கள் நிறைவேற்றவில்லை யென்று எதிர்கட்சியினர் சிலர் கூறுகின்றனர் இதை மக்கள் நம்புகிறார்களா என்பது வேறு.

கருணாநிதி ஆட்சி காலத்தில் (1970 முதல் 1977 வரை ஆளுநர் ஆட்சி காலத்தில் செய்ததையும் சேர்த்து 17508 வீடுகள் ரூ. 49 கோடியே 63 லட்சம் செலவில் கட்டப்பட்டது. ஆனால் நாங்கள் ஆட்சிக்கு வந்து 1977-ம் ஆண்டு முதல் 1980 ஜூன் வரை 59327 வீடுகள ரூ 181 கோடி செலவில் கட்டித் தந்தோம். இவ்வளவு செய்தும் எங்களை ஒன்றும் செய்யவில்லை என்கிறார்கள்.

1980க்கு பின் இன்று வரை மேலும் பலதிட்டங்களை செய்துவருகிறோம். நாங்கள் எங்கள் கடமையை செய்கிறோம்.

### மன நிறைவு

பல கால்வாய்களை வெட்டியுள்ளோம், மதகுகளை ஆழப்படுத்தும் பல பணிகளும் நடைபெற்றுள்ளன. கடமையைச் செய்தமன நிறைவு ஏற்படுகிறது.

பதவிக்கு வந்த போது அவர்கள் (தி.மு க.வினா) என்ன நிலையில் இருந்தார்கள், பதவிக்கு வந்து போன பின் எப்படிபோனார்கள். எத்தனை வீடுகளுக்கு எவ்வளவு நிலங்களுக்கு சொந்தக்காரர்கள் ஆனார்கள். இது நாட்டு மக்களுக்குத் தெரியாதா?

1980-ம் ஆண்டு கப்பல் பேரத்தில் 3 கோடிருபாய் வாங்கியதாக எங்கள் மீது கருணாநிதி குற்றம்சாட்டினார்.

வாங்காதகப்பலுக்குலஞ்சம் வாங்கியதாக கூறினார். அப்போது கப்பல் வாங்க எண்ணியிருந்த நாடு பல்கேரியா. அது ஒரு கம்யூனிஸ்டு நாடு கம்யூனிஸ்டு நாட்டிலா லஞ்சம் கொடுப்பார்கள்?

குற்றம் சொல்வோர்கள் தங்களை மனதில்வைத்து நாம் இப்படிச் செய்தோமே இவர்கள் அப்படி செய்திருப்பார்களா என எண்ணி குற்றம் கூறுகிறார்கள். குற்றம் கூறுவதற்கு ஆதாரம்வேண்டும். இங்கு (பொது மேடைகளில்) குற்றம் கூறுவோர்கள் வழக்கு மன்றத்திற்கு வா என்றால் வரமாட்டேன் என்கிறார்கள்.

என் மீது குற்றம் கூறுவோர்கள் ஆதாரம் இருந்தால் வழக்கு மன்றத்தில் நிரூபிக்கலாமே! ஒரு பாவமும் செய்யாத என் மீது கருணாநிதி ஒரே நீதி மன்றத்தில் 9 வழக்குகள் போட்டார். நாங்கள் அது போன்ற பழிவாங்கும் நடவடிக்கை எதிலும் ஈடுபடவில்லை.

### பல்வேறு திட்டங்கள்

எங்களை நம்பி நீங்கள் (மக்கள்) ஓட்டு போட்டீர்கள். அதற்கேற்ப உங்களுக்காக பணியாற்றுகிறோம்.

தேர்தல்நேரத்தில் இது போன்று அதிக நேரம் பேச முடியாது. எனவே நாங்கள் செய்தவற்றை இதுபோன்ற சந்தர்ப்பங்களில் விளக்கிக் கூறுகிறோம். தேர்தல் அறிக்கையில் சொல்லாத சத்துணவு

திட்டம் போன்றவற்றை செய்து வருகிறோம்.

நாங்கள் கொண்டுவந்த திட்டத்தை தேர்தலுக்காக கொண்டுவரப்பட்ட திட்டம் என்றனர். இந்தத் திட்டம் தேர்தலுக்குப் பின் தொடராது என்றனர். திட்டங்களெல்லாம்இன்று செயல் படுத்தப்படுகின்றன. எல்லா முதியவர்களுக்கும் உதவித்தொகை வழங்க முடிவு செய்துள்ளோம். முதியோர் உதவித் தொகைபெறாத ஆதரவற்ற முதியோர் யாராவது இருந்தால் மாவட்ட ஆட்சித் தலைவருக்கு மனுச் செய்து பெற்றுக் கொள்ளுங்கள்.

அடுத்த ஆண்டுமுதல் சத்துணவு சாப்பிடும் குழந்தைகளுக்கு இலவச சீருடை வழங்கவுள்ளோம். சத்துணவு திட்டத்தை சோம்பேறியாக்கும் திட்டம்என்றனர் 4வயது 5 வயது குழந்தை என்ன வேலைசெய்யப்போகிறது தேர்தல் வரப்போவதை அறிந்து நாங்கள் ஆட்சிக்குவந்தால சத்துணவுதிட்டம் நீடிக்கும் எனறு கருணாநிதி பேசுகிறார். முன்பு பிச்சைக்கார திட்டம் என்று கூறியவர்கள் இன்று சத்துணவு திட்டம் நீடிக்கும் என்கிறார்கள்.

### குறை கூறுகிறார்

காஞ்சிபுரததை தலைநகராகக் கொண்டு அண்ணா மாவட்டம் அமைக்க வேண்டுமென்று கருணாநிதி கூறுகிறார். நீங்கள ஆட்சியிலிருந்த போது என்ன செய்தீர்கள்? அறிவாளியாகியநீங்கள் காமராஜர், முத்துராமலிங்க தேவர் அண்ணா பெயரில் மாவட்டம் அமைத்திருக்கலாமே!

கருணாநிதி ஒன்றை தானும் செய்யமாட்டார் மற்றவர்களையும் செய்ய விடமாட்டார். கட்டிய வீட்டுக்கு குறை சொல்வதில் சமர்த்தர். கருணாநிதி ஆற்றிய நல்லகாரியத்துக்கு எந்தபுள்ளி விவரமும் கிடையாது.

தேர்தலின்போது விவசாயிகளை பாதுகாப்போம் என்றோம். இன்று விவசாயிகளுக்கு பயிர் பாதுகாப்புத் திட்டம் கொண்டு வந்துள்ளோம், ஆதரவற்ற வயதான விவசாயிகளுக்கு மாத ஓய்வூதியம் தருகிறோம், ஆண்டுக்கு இருமுறை இலவச வேட்டி சேலை வழங்குகிறோம்.

இது தவிர விவசாயிகள் பணியின் போது பாம்பு போன்ற விஷபூச்சிகளால் தாக்கப்பட்டு உயிரிழந்தால் அவர்கள் குடும்பத்திற்கு ரூ. 5 ஆயிரம் வரை வழங்க உத்தர விட்டுள்ளோம். ஊனமுற்றோருக்கும் ஏராளமான உதவிகளை செய்து வருகிறோம்.

### பிரதமர் பாராட்டு

சமீபத்தில் நடைபெற்ற தேசிய அபிவிருத்திக் கவுன்சில் மாநாட்டில் அடுத்த ஆண்டுக்கான திட்டம் பற்றி விவாதித்தோம்.

அரசின் திட்டங்கள்பற்றி எடுத்துச் சொன்னோம். நாங்கள் சொன்ன தொழில் கல்வி திட்டத்தை பிரதமர் பாராட்டினார். தமிழகத்தில் அமல்படுத்த இருக்கும் படிக்கும்போது தொழிலை கற்றுக்கொள்ளும் தொழில்கல்வி திட்டதை எல்லா மாநிலங்களும் பின்பற்றலாம் இது சிறந்த திட்டம் என்று பிரதமர் பாராட்டினார். வேறுமாநிலத்தில் தொழில் கல்வி திட்டம் இல்லை.

என்னைப் பொறுத்த வரையில் பணம் சேர்க்க வேண்டிய அவசியமில்லை நான சினிமாவில் இருக்கும்போதே கார், வீடு என்று எல்லா வசதிகளும் நீங்கள் எனக்கு தந்தீர்கள். இனிஎனக்குஎதற்குபணம் கட்சிக்கு பணம்வேண்டுமென்றால உங்களிடம் வந்தால் நீங்கள் தருகிறீர்கள். நான் ஏன் பணம் வாங்கவேண்டும்.

யார் எதைச் சொன்னாலும்நான் நிலை தடுமாறாது திடமாக இருக்கும் வரை பதவியில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் உங்களுக்காக தொண்டு செய்வேன். என்னை துப்பாக்கியால் சுட்டனர், நான் எம்எல்ஏ ஆனேன். கருணாநிதி கட்சியிலிருந்துதூக்கிஎறிந்தார் நீங்கள் என்னை பதவியில் அமரவைத்தீர்கள். ஒரு வகையில் கருணாநிதிக்கு நன்றி சொல்ல வேண்டும் (பலத்த சிரிப்பு)

என்மீது நம்பிக்கை வைத்துள்ள உங்களுக்கு கைகூப்பிவணக்கம்செலுத்துகிறேன் என் கடமையை தொடர்ந்து ஆற்றுவேன்.

காஞ்சிபுரத்தை தலைநகராகக் கொண்டு அண்ணா மாவட்டத்தை கருணாநிதி அறிவித்திருக்கிறார். தபாவில முத்திரை குத்த வேண்

(2-ம் பக்கம் பார்க்க)

## இந்தியாவில் இன்று...

### காரைக்கால் அருகே துப்பாக்கிச் சூடு

காரைக்கால் அருகே தரங்கம்பாடி கடல் பகுதியில், ஓர் படகில் வெளிநாட்டுப்பொருட்கள் கடத்திவரப்படுவதாக சுங்க இலாகா அதிகாரிகளுக்கு தகவல் கிடைத்தது.

இதையடுத்து சுங்க இலாகா அதிகாரிகள் மற்றொரு படகில் விரைந்து சென்றனர் மின்னல் வேகத்தில் சென்ற கடத்தல் படகை பிடிக்க சுங்க இலாகா அதிகாரிகள் பலமுறை வானை நோக்கி துப்பாக்கியால் சுட்டனர்,

கரைஓரமாக படகு சென்றபோது அதிலிருந்தவர்கள் கரைக்கு தப்பி ஓடி விட்டனர்.

அந்தப் படகில் 15 லட்சரூபாய்மதிப்புள்ள வெளிநாட்டு மருந்துகள் ஜிப்புகள் இருந்தன.

இது குறித்து சுங்க இலாகாவினர் விசாரித்து வருகிறார்கள்.

சிவில் சப்ளை ஊழியர்கள் மாற்றம்:

## அரசு உத்திரவை எதிர்த்தரிட் மனு தள்ளுபடி

சென்னை, ஜூலை 20- சிவில் சப்ளை ஊழியர்களை கூட்டுறவு துறைக்கு மற்றும் அரசின் உத்தரவை எதிர்த்த ரிட்மனு ஒன்றை இன்று உயர் நீதிமன்றம் தள்ளுபடி செய்தது.

சிவில் சப்ளை கார்ப்பரேசன் பகுதி நேர ஊழியர்கள் சார்பில் உயர்நீதி மன்றத்தில் ஒரு ரிட்தாக்கல் செய்யப்பட்டிருந்தது அந்த மனுவில் சிவில் சப்ளை ஊழியர்களை கூட்டுறவு துறைக்கு மாற்றும் அரசின் உத்தரவு செல்லாதென அறிவிக்க வேண்டுமென்று அவர்கள் கோரி இருந்தனர்.

இந்த மனு மீதான விசாரணை சென்னை உயர்நீதி மன்றத்தில் நீதிபதி நடராசன் முன்னிலையில் விசாரணைக்கு வந்தது. மனுவை விசாரித்த நீதிபதி நடராசன் இந்த மனுவை தள்ளுபடி செய்து உத்தர விட்டார். அரசு பொது நலத்தோடு செய்யும் இது போன்ற காரியங்களில் கோர்ட் குறுக்கிட முடியாது மேலும் ஊழியர்கள் மாற்றத்தில் பாதிப்பு ஏற்படாத வகையில இருக்க அரசே ஒரு குழு அமைத்து செயல்படுகிறது எனவே மனுவை தள்ளுபடி செய்வதாக நீதிபதி நடராசன் தனதுதீர்ப்பில் கூறியிருக்கிறார்

புதிய மாவட்ட தலைநகர்களில்

### நவீன நகரங்கள் அமைக்கதிட்டம்

சென்னை, ஜூலை 20- தலைமை செயலாளர் கே. சொக்கலிங்கம் நிருபர்களிடம் கூறியதாவது:-

தமிழகத்தில் புதிதாக அமைக்கப்பட உள்ள மாவட்டங்களுக்கான தலைநகர்களில் மாவட்டஆட்சித்தலைவர் அலுவலகங்கள் அரசு ஊழியர் குடியிருப்புகள் அலுவலகங்கள் அடங்கிய அனைத்தும் புதிய இடங்களில் நவீன நகரங்களாக உருவாக்கப்படும்

இந்த நகரங்களுக்கு நடுவில் மருத்துவ மனை பள்ளிகள் - கடைகள் ஆகிய அனைத்து வசதிகளும் அமைக்கப்படும்.

இவ்வாறு கே. சொக்கலிங்கம் கூறினார்.

செல்வி ஜெயலலிதா பேச்சு...

3.ம் பக்கம்

அமைச்சர் பண்ருட்டியார் பேட்டி:

## தமிழகத்தில் மின் வெட்டு அடியோடு நீக்கம்

சென்னை, ஜூலை 20- அமைச்சர் பண்ருட்டியார் நிருபர்களிடம்கூறியதாவது:-

கடந்த 1980க்கு பிறகு இப்போது தமிழகத்தில் உள்ள எல்லா நீர் மின் நிலையங்களிலும் தண்ணீர் போதுமான அளவு உள்ளது.

மின் உற்பத்தி அதிகரித்துள்ளது மேலும் தென் மேற்கு பருவ மழை நல்ல முறையில் நீடித்து வருகிறது.

நீர்மின் நிலையங்களில் போதிய அளவு மின் உற்பத்தி ஆவதால் ஏற்கனவே விதிக்கப்பட்டிருந்த உச்சத்தேவையில 15 சதவிகித மின்வெட்டு உடனடியாக நீக்கப்படுகிறது

விவசாயத்திற்கு 2பகுதிகளாக வழங்கப்பட்டு வரும் மின்சாரம் தொடர்ந்து அம் முறையில் வழங்கப்படும்

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டியார் கூறினார்.

முதல்வர் புரட்சித்தலைவர் நடவடிக்கை

## குட்டிமணியின் குழந்தைகளுக்கு கல்விக்காக ரூ. 3500 அளிப்பு

சென்னை, ஜூலை 20- தமிழ் விடுதலை இயக்கத்தைச் சேர்ந்த தலைவர்களில் ஒருவரான குட்டிமணி கடந்தஆண்டு இலங்கையில் நடந்த கலவரத்தில் கொல்லப்பட்டது தெரிந்ததே

குட்டிமணியின் குடும்பம் அடைக்கலம் தேடி தமிழகத்திற்கு வந்த போது முதல்வர் புரட்சித் தலைவர் அவர்களது குடும்பம் வாழ்நாள் முழுவதும் வாடகை இன்றி வசிப்பதற்குஒருவீட்டினை அளித்தார்.

கொல்லப்பட்ட குட்டிமணிக்கு 2 குழந்தைகள் உள்ளனர் அந்தக் குழந்தைகள் கல்வி செலவிற்காக தமிழக அரசு 3500 ரூபாய் நிதி அளித்துள்ளது. இத் தகவலை தலைமை செயலாளர் கே சொக்கலிங்கம் தெரிவித்துள்ளார்.

### நாங்கள் மக்கள் சக்தியையே நம்பி இருக்கிறோம்

# விவசாயத்திற்கான மின்கட்டணத்தை மேலும் குறைக்க அரசு ஆலோசனை

## முதல்வர் புரட்சித்தலைவர் தகவல்

தேனி, ஜூலை 20— விவசாயத்திற்கு பயன்படுத்தும் மின்சார கட்டணத்தை மேலும் குறைப்பது பற்றி அரசு ஆலோசித்து வருகிறது என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

தேனியில் புதிதாக அமைக்கப்பட்டுள்ள 368 குடியிருப்புகள் தொடக்க விழா நேற்று நடைபெற்றது. விழாவில் வீட்டு வசதி வாரியத் தலைவர் ஏ. செல்லையா வரவேற்புரையாற்றினார் நிகழ்ச்சிக்கு அமைச்சர் எஸ்.ஆர்.ராதா தலைமை வகித்தார். விழாவில் அமைச்சர் முத்துசாமி, எஸ்.எஸ். ஆர் எம்எல்ஏ, ஐக்கையன் எம்.பி, தேனி ஜெயராமன் எம்.எல்.ஏ. சேடப்பட்டி முத்தையா எம்.எல்.ஏ. ஆகியோர் பேசினர். அமைச்சர்கள் காளிமுத்து, யூசுப் மற்றும் சட்டமன்ற உறுப்பினர்கள் சுப்பிரமணியம், கோபால் ஆகியோரும் பங்கேற்றனர்.

இந்தக் குடியிருப்புக்கு "நடிப்பிசை புலவர் கே. ஆர். ராமசாமி குடியிருப்பு" என பெயர் சூட்டி முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

முதல்வர் பேசுகையில் கூறியதாவது:-

நாடாளுமன்ற இடைத்தேர்தலுக்குபின் மீண்டும் உங்களைச் சந்திக்க வாய்ப்பு கிடைத்திருக்கிறது. மிக்க மகிழ்ச்சியுறுவதுடன் அதற்காக நன்றியும் தெரிவித்துக்கொள்கிறேன் எதிர்க்கட்சிகள் என்னதான் எங்கள் மீது குறை கூறினாலும் அதையெல்லாம் பொருட்படுத்தாது நீங்கள் ஐக்கையனைத் தேர்ந்தெடுத்தீர்கள்.

### செயலில் நன்றி

தேர்தலில் ஜெயித்த நீங்கள் நன்றி சொல்ல போனீர்களா என்று சிலர் கேட்டனர், வாயால் நன்றி சொல்வதை விட மக்களுக்கு தேவையானவற்றை செய்து செயலில் நன்றி காட்டுகிறோம்.

வாய்ச்சொல் வீரனாக இருக்க நான் தயாரில்லை சொல்வது எளிது செய்வதுதான் கடினம் எங்களால் முடிந்ததை செய்கிறோம். நினைத்ததை முடித்துக் காட்டுவேன் அதற்கு மக்கள் ஒத்துழைப்பு தேவை.

இந்தத் தொகுதிக்கான இடைத்தேர்தலின் போது எதிர்க்கட்சிகள் சத்துணவு திட்டத்தை நிறுத்தி விடுவார்கள் என்றனர். ஆனால் இன்று சத்துணவு திட்டம் விரிவாக்கப்பட்டு 65 லட்சம் குழந்தைகளும் பல லட்சம் முதியோர்களும் சத்துணவு சாப்பிடுகின்றனர். நாங்கள் தேர்தலுக்காக எதையும் செய்யவில்லை.

விவசாயிகளுக்கு துரோகம் செய்த கருணாநிதி நாங்கள் துரோகம் செய்ததாக கூறுகிறார் விவசாயிகளுக்கு 12 காசு என இருந்த மின் கட்டணத்தை 16 காசாக உயர்த்தியவர் கருணாநிதி. ஆனால் கருணாநிதி உயர்த்திய பதினாறு காசை 12 காசாக குறைத்தவர்கள் நாங்கள். 12 காசாக குறைத்ததற்காக கருணாநிதி எங்களை துரோகி என்று சொல்கிறாரோ என்னவோ தெரியவில்லை. ஒரு வேளை அவர் கூட்டியது போல மின்கட்டணத்தை கூட்டியிருந்தால நல்லவர் என்று சொல்வாரோ என்னவோ? விவசாயத்துக்கான மின் கட்டணத்தை இன்னும் குறைக்கலாமா என்று [illegible] ஆலோசித்து [illegible]றோம்.

### மக்கள் சக்தி

விவசாயிகளுக்கு மின் கட்டணத்தில் எவ்வளவு சலுகை அளிக்கமுடியுமோ அவ்வளவையும் தரமுயற்சிக்கிறோம். கருணாநிதியைப்போல் நான் இரும்புக்கரத்தால் அடக்குபவனல்ல. நான் மக்கள் சக்தியை நம்பியிருக்கிறேன். மக்கள் சக்தியே மகேசன் சக்தி என்று நினைப்பவன் நான்.

விவசாயத் தொழிலாளர்கள் பணியின் போது இறந்தால் அவர்கள் குடும்பத்துக்கு ரூ. 5 ஆயிரம் வரை உதவியளிக்கப்படுகிறது. மீனவர்களுக்கும் பாதுகாப்புத் திட்டம் ஏற்படுத்தியிருக்கிறோம். இதுபோல் நெசவாளர்களுக்கும் பாதுகாப்பு ஏற்படுத்தி தர இருக்கிறோம்.

நெசவாளர்கள் தங்கள் குழந்தைகளை அதே தொழிலில் ஈடுபடுத்த வேண்டுமென்று எண்ணாது அவர்களை நன்கு படிக்க வைத்து உயர்ந்த உத்தியோகத்திற்கு வரச் செய்ய வேண்டும். வண்டி இழுப்பவர் மகன் டாக்டராகவோ, என்ஜினியராகவோ, கலெக்டராகவோ வரவேண்டும்.

### சிறப்பு பயிற்சி

படித்த வீட்டுப்பிள்ளைகளுடன் ஏழைகள் வீட்டுப் பிள்ளைகள் பாமர வீட்டுப் பிள்ளைகள் போட்டி போடுமளவு வளர வேண்டும். இதற்காகத்தான் விசேஷ பயிற்சி திட்டம் போன்றவற்றை அறிமுகப்படுத்தியுள்ளோம்.

நுழைவுத் தேர்வு முறையைக் கொண்டுவர எண்ணியபோது ஏழை மாணவர்களுக்கான விசேஷ பயிற்சி திட்டத்துக்கான திட்டத்தையும் தீட்டினேன் எஸ். எஸ். எல். சி. தேர்வில் தவறிய ஏழை மாணவர்களுக்கு விசேஷ பயிற்சி அளிப்பதற்காக 1000 மையங்கள் அமைக்கப்படவுள்ளன.

ஒவ்வொரு மையத்திற்கு ரூ. 4500 செலவாகிறது. தோல்வி கண்ட மாணவர்கள் வெற்றி வாய்ப்பு பெற பயிற்சி தரப்படுகிறது தேர்தல் நேரமாக இருந்தால் எதிர்க்கட்சியினர் இதையும் தேர்தலுக்காக கொண்டு வரப்பட்ட திட்டம் என்று கூறியிருப்பார்கள் திட்டங்களை செயல்படுத்துவதற்காகவே எங்களை நீங்கள் தேர்ந்தெடுத்தீர்கள். நாங்கள் தேர்தலில் சொல்லாதவற்றையும் செய்கிறோம்.

ராமநாதபுரம் மாவட்டத்தை மூன்றாகப் பிரித்துள்ளோம்.

### மைய அரசு நிதியுதவி

நிர்வாக வசதிக்காக இதை பிரித்துள்ளோம் மேலும் மைய அரசு அறிவித்துள்ள எந்த தொழிலும் இல்லாத மாவட்டத்திற்கான உதவி தொகை அறிவிப்பில் தமிழகத்திலுள்ள மாநிலங்கள் பெரிதாக இருப்பதால் ஏதேனும் ஓரிடத்தில் ஒரு தொழில் இருப்பதால் உதவி தொகை பெறமுடியவில்லை. பஞ்சாப், அரியானா போன்ற மாநிலங்கள் சிறியதாக இருந்தாலும் அங்கே மாவட்டங்கள் அதிகம் அதனால் அவர்களுக்கு மைய அரசின் உதவித் தொகை கிடைக்கிறது. நமக்கும் கிடைப்பதற்காக நம்மாவட்டங்களை பிரித்துள்ளோம்.

எதிர்க்கட்சியினர் நாங்கள் எதையும் செய்யவில்லை என்கின்றனர் ஒவ்வொரு ஊரிலும் நாங்கள் மக்களுக்கு செய்ததை பலகையில் எழுதி வைக்க உத்தரவிட்டுள்ளேன். அந்தப் பலகையில் தவறாக எழுதியிருந்தால் கூட [illegible] முடியும்.

[illegible] சாலை வசதி போன்றவற்றை ஏற்படுத்தி தரவும் அவைகளை சரியாக பராமரிக்கவும் பொதுப்பணித்துறை அலுவலகங்கள் அந்தந்த மாவட்டத்திலேயே அமைக்கப்பட வேண்டுமென உத்தரவிட்டுள்ளேன்.

### கள்ள ஓட்டை தடுக்க வேண்டும்

சில இடங்களில் காண்ட்ராக்டர்கள் கலப்பட சிமெண்ட் போன்றவற்றை பயன்படுத்துவதால் கட்டிடம் பலமில்லாமல் இருக்கிறது. இவைகளையெல்லாம் மக்கள் கண்காணிக்க வேண்டும்

அதிகாரிகளிடம் உங்கள் குறைகளைச் சொல்ல பயப்படாதீர்கள் நீங்கள் (மக்கள்) தான் அதிகாரிகளுக்கு சம்பளம் கொடுக்கிறீர்கள்.

1985-ம் ஆண்டு செப்டம்பர் 15 முதல் மீண்டும் மதுவிலக்கு அமல்படுத்தப்படும். கள்ளச் சாராயத்தை ஒழிக்க அரசு தீவிர நடவடிக்கை எடுத்து வருகிறது.

கள்ள ஓட்டு போட யாரும் இடம் தராதீர்கள்.

ஊராட்சி தேர்தலில் அடையாள அட்டை கொடுக்க இருக்கிறோம் பெண்களுக்கான புகைப்படத்தை பெண்கள் தான் எடுப்பார்கள்.

ரேஷன் கடைகள் மூலம் மக்களுக்கு ரேஷன் கார்டுகளுக்கு மலிவு விலையில் அரிசி தருகிறோம், ரேஷன் கார்டுகள் அதிகம் பேரை சேர்த்து ரேஷன் கடைகளில் அதிக அரிசி வாங்கி அதை வெளிமார்க்கெட்டில் சிலர் விற்கின்றனர் ரேஷன் கடைகளில் 2 ரூ. 2 ரூபாய் 10 காசுக்கு அரிசி தருகிறோம் இதனால் அரசுக்கு 90 முதல் 100 கோடி ரூபாய் நஷ்டம் ஏற்படுகிறது. போலி ரேஷன் கார்டுகளை பயன்படுத்து ஏழை மக்கள் வயிற்றில் அடிக்காதீர்கள்

### அரிசி கையிருப்பு

ஒருகட்சி தலைவர் அரிசி பஞ்சம் வரப் போகிறது என்றாராம். முன்பு எப்போதும் இல்லாத அளவு இப்போது அரிசி கையிருப்பு உளளது. மைய தொகுப்புக்கு 1 லட்சம் டன் அரிசிக் கொடுப்பதா கூறியுள்ளோம்.

செப்டம்பர் 15 முதல் ரேஷன் கார்டுகளுக்கு 20 கிலோ அரிசி தரவுள்ளோம். இவற்றுக்கெல்லாம் இயற்கை துணை செய்கிறது.

இங்கு கட்டப்பட்டிருக்கும் குடியிருப்பை சுற்றிப் பார்த்தேன் குடியிருப்பு நல்ல முறையில் உள்ளது. வெளிப்பகுதியில் சாலை வசதி ஏற்படுத்தி தர வேண்டும் யார் எதிர்த்தாலும் இறுதி மூச்சு உள்ளவரை என் கடமையை செவ்வனே செய்வேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

---

பிரதமர் இந்திராகாந்திகூட்டத்தில்

### கத்தியுடன் திரிந்த வாலிபர் கைது

ஐதராபாத், ஜூலை 20- பிரதமர் இந்திரா காந்தி பேசிய கூட்டத்தில் கத்தியுடன் திரிந்த ஒரு வாலிபரை போலீசார் கைது செய்துள்ளனர் ஆந்திர மாநிலம் மேடக் தொகுதியில் நடந்த ஆந்திரா காங்கிரஸ் பொதுக் கூட்டத்தில் பிரதமர் ஆந்திரா பேசினார். அப்போது ஒரு வாலிபர் கையில் கத்தியுடன் திரிந்து கொண்டிருந்தார். அவரை போலீசார் கைது செய்து விசாரணை நடத்தி வருகின்றனர்.

---

அமெரிக்க ஜனாதிபதி தேர்தல்

### ரீகனை எதிர்த்து மாண்டேல் போட்டி

சான்பிரான்சிஸ்கோ ஜூலை 20— அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் மீண்டும் போட்டியிடும் ரீகனை எதிர்த்து மாண்டேல் போட்டியிடுகிறார்.

டெமாக்ரடிக் கட்சி மாண்டேலை வேட்பாளராக நிறுத்த முடிவு எடுத்துள்ளது.

இவர் முன்னாள் துணை ஜனாதிபதி ஆவார்.

---

## விளையாட்டுக் களம்...

ஒலிம்பிக் போட்டியில் பங்கேற்கும் இந்திய வீராங்கனைகள்

ஒலிம்பிக்கில் பங்கேற்கும் இந்திய வீரர்கள் இருவர்

பிரேமினா சாந்தராம்

லாஸ் ஏஞ்சல்சில்

### ஒலிம்பிக்: டி. வி.யில் ஒளிபரப்ப ஏற்பாடு

புதுடெல்லி, ஜூலை 20- லாஸ் ஏஞ்சல்சில் நடைபெறும் ஒலிம்பிக் விளையாட்டுபோட்டியை ஒளிபரப்ப இந்திய தொலைக்காட்சி ஏற்பாடுகளைச் செய்துள்ளது.

லாஸ் ஏஞ்சல்சில் ஜூலை 29 முதல் ஆகஸ்ட் 12 வரை இந்தப் போட்டி நடைபெறுகிறது.

ஒலிம்பிக் பந்தய துவக்க நாளான ஜூலை 29ம் தேதி இந்திய டி. வி. நிலையம் நேரிடையாக அந்த நிகழ்ச்சிகளை ஒளி பரப்புகிறது.

29ம் தேதி இந்திய நேரம் அதிகாலை 4மணியில் இருந்து காலை 9 மணி வரை நேரிடையாக டி. வி. ஒளி பரப்புகிறது.

பதிவு செய்யப்பட்ட நிகழ்ச்சி அன்று மாலை 6-30 மணிக்குஒளிபரப்பப்படுகிறது.

விளையாட்டு சிறப்பு நிகழ்ச்சிகள ஜூலை30ம் தேதிமுதல் இரவு 7-45 முதல் 8-45 வரையிலும் பிறகு 9-20ல் இருந்து 9.50 வரையிலும் அதன் பிறகு இரவு 10-10 மணியிலிருந்து 10-40 வரையிலும் ஒளி பரப்பப்படும்.

இங்கிலாந்து செல்ல

### 6 செஸ் விளையாட்டு வீரர்கள்தேர்வு

ஐதராபாத், ஜூலை20- பிரைட்டனில் நடைபெறும் பிரிட்டிஷ் சாம்பியன் ஷிப் செஸ் விளையாட்டுக்கு 6 இந்திய வீரர்கள் தேர்வு செய்யப்பட்டுள்ளனர்.

தேசிய செஸ்சாம்பியன் பி. எம். திப்சே உட்பட 6 பேர்கள் தேர்வு செய்யப்பட்டுள்ளனர்.

பிரைட்டனில் ஜூலை 31ம் தேதி முதல் இந்தப் போட்டி நடைபெறுகிறது.

---

பொய்செய்தி வெளியிடும்திமுக. எடுபிடிஏடுகள்:

# அமைச்சர் எஸ். டி. எஸ். கடும் கண்டனம்

## புரட்சித்தலைவரின் தொண்டனாக பணியாற்றுவேன்

சென்னை, ஜூலை20 நான் பேசிய பேச்சுகள் திரித்து வெளியிடப்படுகின்றன நான் புரட்சித்தலைவரின் தூய தொண்டனாக உழைத்து வருகிறேன் என்னால் சிறு மாசு கூட கட்சிக்கோ-ஆட்சிக்கோ ஏற்படாது என்று அமைச்சர் எஸ்.டி.எஸ் கூறினார்.

தமிழக உணவு அமைச்சர் எஸ் டி எஸ் இன்று காலை சென்னை கோட்டையில் நிருபர்களுக்கு பேட்டியளித்தார். அப்போது அவர் கூறியதாவது:

தமிழக முதல்வருக்கும் எனக்கும் மாறுபட்ட கருத்து உள்ளதாக வேண்டுமென்றே திரித்து சிலர் பேசி வருகிறார்கள்.

அப்படி பேசப்படுவதற்கு முதல்வர் புரட்சித்தலைவர் விருதுநகரில் பேசும் போதே முற்றுப்புள்ளி வைத்தார். அங்கே முதல்வர் புரட்சித்தலைவர் பேசுகையில் எஸ் டி எஸ் அவர்களிடம் யார் எது சொன்னாலும நான் சொல்வதைத்தான் கடைசியில் கேட்பார்.

நான் ஒருவேட்பாளரை காண்பித்து அவரை வெற்றி பெறச் செய்ய வேண்டும் என்று சொன்னால்தன் உயிரை கொடுத்தாவது அந்த வேட்பாளரை வெற்றி பெறச் செய்வார் என்று தெரிவித்துள்ளார்.

இதற்கு பிறகும் கூட எங்கள் இருவருக்கும் மாறுபட்ட கருத்து இருப்பதாக சொல்வது சரியல்ல.

ஆரம்பம்முதல் புரட்சித்தலைவர் தலைமையில் நான் கட்சிக்கும் தலைவரிடத்தில் தூய தொண்டனாக உழைத்து வருகிறேன்.

அவரை நான் தலைவராக ஏற்றுக் கொள்ளவில்லையென்று நான் சொல்லாததைச் சொல்லி என் மீது பழியைப் போடுவது சரியல்ல.

அண்ணா பவளவிழாவில் புரட்சித்தலைவர் அண்ணாவின் கொள்கைகளை ஒன்றன் பின் ஒன்றாக நிறைவேற்றி வருகிறார் என்று பேசி வருகிறேன்.

அண்ணாவின் தனித்தன்மையை பற்றி நான் பேசும்போது புரட்சித்தலைவருக்கு விரோதமாக நான் கூறவில்லை.

மதுவிலக்கு பற்றி நான் பேசும் போது "கள்ள சாராயத்தை ஒழிப்பதற்காகத்தான் மதுவிலக்கை தற்காலிகமாக புரட்சித்தலைவர் தளர்த்தினார். என்று கூறியுள்ளேன்.

### நல்ல பெயரை உருவாக்குவேன்

அதற்கு பிறகுதான் மது குடிப்பதனால் விளையும் துன்பங்களை எடுத்துச் சொல்லி வருகிறேன்.

"குடி குடியைகெடுக்கும்" இந்த வரிகளைஒவ்வொரு மதுக் கடைகளிலும் எழுதி வைக்க வேண்டும் பாட்டில்களிலும் இந்த வாக்கியம் அடங்கிய லேபிள் ஒட்ட வேண்டுமென்று அரசு உத்தரவு போட்டுள்ளது

புரட்சித்தலைவர் தலைமையில் நான் கட்சிக்கும் ஆட்சிக்கும் உழைத்து வருகிறேன்.

அதனால் என்னால் முடிந்தவரை இது வரையிலும் கட்சிக்கும் ஆட்சிக்கும் நல்ல பெயரையே உண்டாக்கி இருக்கிறேன் எந்த இடத்திலும் என்னால் ஒரு சிறு மாசு கூட கட்சிக்கோ, ஆட்சிக்கோ வராமல் பார்த்துக் கொண்டுள்ளேன். இது புரட்சித்தலைவருக்கு நன்றாக தெரியும்.

இவ்வாறு அமைச்சர் எஸ் டி எஸ் கூறினார்.

---

## புரட்சித்தலைவர்சவால்..

1 ம் பக்கத் தொடர்ச்சி

டாமா? இவர் அறிவித்தவுடன் மாற்றி விடுவார்களா? 7 ஆண்டு முதல்வராக இருந்தவருக்கு இது கூடத் தெரியாதா?

எவ்வளவுகுற்றம்செய்து இப்படி ஒரு நிலைக்கு ஆளாக்கப்பட்டிருக்கிறார் என்ன குற்றம் செய்தால் இப்படிநிலைவரும்என்பது எங்களுக்கு பாடம்.

என்னைக் கொலை செய்துவிடுவதாகவும், கை, காலை வெட்டிவிடுவதாகவும், ஆசிட்டை ஊற்றி விடுவதாகவும் எனக்கு மிரட்டல் கடிதம் வருகிறது. ஆசிட்டை ஊற்றினால் பிளாஸ்டிக் சாஜரி செய்து கொள்கிறேன். அதனால் என் கடமையைத் தடுக்க முடியாது. என்னைப் பற்றி நான் என்றும் கவலைப்படுவதில்லை. சுடப்பட்ட நாளிலிருந்து என்வாழ்க்கை தொடங்கியதாக நினைக்கிறேன். எனக்கு 17 வயதுதான் 100 ஆண்டுகள் வாழ்வேன் என்றாலும் இன் 83 ஆண்டுகள தொடர்ந்து மக்களுக்காக பணியாற்றுவேன.

ராஜாஜி ஆட்சியில் இருந்தபோது "நான்எனது பையில் ராஜினாமா கடிதம் எழுதி வைத்திருக்கிறேன். என்றாலும் 100 வருடம் பதவியில் இருப்போம் என எண்ணி அதற்கேற்ப திட்டங்கள் தீட்டுகிறேன்" என்றார்.

அது போல் நாங்களும் 100 ஆண்டுகள் பதவியில் இருப்போம் என எண்ணி தொலை நோக்கோடு திட்டங்கள் தீட்டி செயல் படுத்துகிறோம். முன்னாள்முதல்வர்கருணாநிதி செய்ததவறுகளை நாங்களும் செய்யக்கூடாது என்பதில் கவனமாக இருந்து பணியாற்றுகிறோம். இப்போதுசத்துணவு சாப்பிடும் குழந்தைகள் 10 ஆண்டுகளுக்கு பின் வளர்ந்து வேலை செய்யக் கூடிய நிலையில் இருக்கும். அவர்களுக்கு வேலை வாய்ப்பு தர வேண்டாமா? இதையெல்லாம் எண்ணித்தான் செயல் படுகிறோம்.

### தொழில் கல்வி

செப்டம்பர் 15 முதல் 10 முதல் 15 வயதுவரை உள்ள குழந்தைகளுக்கும் சத்துணவு திட்டத்தை விரிவு படுத்தவுள்ளோம் பிளஸ்டுபடிப்பில் தொழில் கல்வி திட்டம் பயனாக இருக்கும். தொழில் கல்வி திட்டத்தில் பரம்பரை தொழில் என்று எதுவுல இல்லை. அவரவர்களுக்கும் ஆர்வம் உள்ள தொழிலை கற்றுக் கொள்ளலாம்.

உழைப்பவரே உயர்ந்தவர் என்ற காலம் வர வேண்டும், இப்போது உழைப்புக்கு மதிப்புதரும் காலம் வந்துள்ளது. இன்னின்ன வேலை என்று பாகுபாடு இருக்கக்கூடாது. ரஷ்யாவில் படித்தவர்கள் சாலையை சுத்தம் செய்யும் பணிகளில் ஈடுபடுகின்றனர்.

### மைய அரசு ஒப்புதல்

உழைப்பவர்களுக்கு தேவையான வசதிசெய்துதரவேண்டும் ஏற்றதாழ்வு நீக்கப்பட வேண்டும். ஆண்களுக்கு சமமாக பெண்களும் படிக்க வேண்டும். பெண்கள் அதிக விகிதாச்சாரத்தில் தேர்வு பெற்று வருகின்றனர். தொழில்கல்விதிட்டத்தை 7-வது ஐந்தாண்டு திட்டத்தில் சேர்க்க மைய அரசு ஒப்புதல் அளித்துள்ளது,

மாணவர்கள் படிக்கும் போது அரசியலில் ஈடுபடக் கூடாது படிப்பில்மட்டுமே கவனம் செலுத்த வேண்டும்.

என் வாழ்வில் படிக்க வேண்டிய வயதில் படிக்க முடியாமற் போயிற்று, மாணவர்கள இத்தனை நாள் கல்லூரிக்கு வர வேண்டும் என்று கூறினால் அதையும் சிலர் எதிர்க்கிறார்கள்,

மாணவர்கள் தான் எதிர்காலத்தில் நல்ல சமுதாயத்தை உருவாக்கக்கூடியவர்கள். மாணவர்கள் படிப்பில் அக்கறை காட்ட வேண்டும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்,

---

கழக பொதுச்செயலாளர்

### திருமிகு ப. உ. ச. அவர்களின் நிகழ்ச்சிகள்

21-ந்தேதி ஒடுகத்தூர்

22 ந்தேதி நெய்வேலி

---

மேட்டூர் அணையில்

### நீர்மட்டம்உயர்வு

திருச்சி, ஜூலை 20- மேட்டூர் அணையில் ஒரே நாளில் நீர்மட்டம் 5 அடி உயர்ந்துள்ளது.

நேற்று மாலை அணையின் நீர்மட்டம் 90.35 அடியாக உயர்ந்தது.

அணையில் விநாடிக்கு 71,579 கன அடிதண்ணீர் வந்துகொண்டுஇருக்கிறது அணையில் இருந்து 27.500 கன அடிதண்ணீர் வெளியே விடப்படுகிறது.

---

பிரபல மிருதங்கவித்வான்

### பாலக்காடு குஞ்சுமணி மரணம்

திருச்சி, ஜூலை. 20— பிரபல மிருதங்க வித்துவான் பாலக்காடு குஞ்சுமணி காலமானார்.

சிறிது காலமாக அவர் நோய்வாய்ப்பட்டு இருந்தார். அவருக்கு வயது 68 பாலக்காடுகுஞ்சுமணிக்கு 1977ம் ஆண்டில் கலைமாமணி விருது தமிழக அரசால் வழங்கப்பட்டது.

## ஏல விளம்பரம்

1. Javer Chand Khum Chand' 706, Poonamalli High Roud. Madras-29 முன்பு அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 8-6-84 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 23-7-84 அன்று பகல் 12 மணிக்கும் 2. G. Jugurat Sowcar. 24. எல். பி. ரோடு அடையார் சென்னை-20. அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 12-7-84 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 27-7-84 அன்று மதியம் 2 மணிக்கும் 3. M. AbhayRaj Kothari, 7. கிழக்கு கல்மண்டபம் ரோடு. சென்னை - 13. அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 24-7-84 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 7-8-84 அன்று மதியம் 12 மணிக்கும் 4. Mothilal Jain, 3, கான் ரோடு, குளைமேடு, சென்னை - 94, முன்பு அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 7-6-84 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 30-7-84 அன்று மதியம் 3 மணிக்கும் 5 M-s C. Kishanlal நம்பர் 10, பிள்ளையார் மெயின் ரோடு டிரஸ்ட்புரம் கோடம்பாக்கம் சென்னை-24 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 7-6-84 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 30-7-84 அன்று பகல் 12 மணிக்கும், 6. Dilip Kumar Galada 35, எல். பி. ரோடு சென்னை-20 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 11-7-84 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 13-8-84 அன்று பகல் 12 மணிக்கும், P.M Jain, 78, தானா தெரு புரசைவாக்கம், சென்னை-7 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 12-4-84 மாற்றப்பட்டுள்ள ஏலத்தேதி 24-7-84 அன்று பகல் 12 மணிக்கும், மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன், பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் M. தரம் சந்த்ஜெயின், 150, சச்சிதானந்தம் தெரு, சென்னை-12 ல் மாவட்ட ஆட்சியரின் உத்திரவுப்படி மேற்குறிப்பிட்ட ஏலத் தேதிகளில் ஏலம் போடுவார்.

மத்திய மந்திரிசபையில்

இலாகா மாறுதல்:

# பி. வி. நரசிம்மராவுக்கு உள்துறை இலாகா

## வெளிநாட்டு இலாகாவை பிரதமரே கவனிப்பார்

புதுடெல்லி, ஜூலை 20 மத்திய மந்திரி சபையில் சில மந்திரிகளின் இலாகாவை பிரதமர் மாற்றி அமைத்தார்.

இலாகா மாற்றம் விவரம் வருமாறு:-

இதுவரை வெளிநாட்டு இலாகா மந்திரியாக இருந்த பி.வி. நரசிம்மராவ் உள்நாட்டு இலாகா மந்திரியாக நியமிக்கப் பட்டுள்ளார். வெளிநாட்டு இலாகாவை பிரதமரே கவனிப்பார்.

உள்நாட்டு இலாகா மந்திரியாக இருந்து வந்த பி. சி. சேத்தி திட்ட மந்திரியாக மாற்றப் பட்டுள்ளார்.

திட்ட மந்திரியாக இருந்து வந்த எஸ் பி சாவன் இப்போதைக்கு இலாகா இல்லாத மந்திரியாக இருப்பார். வெளிநாட்டு இலாகாவை கவனிக்க பிரதமருக்கு இவர் உதவியாக இருப்பார்.

பஞ்சாப் பிரச்சினை காரணமாக உள்நாட்டு இலாகா மிகவும் முக்கியம் வாய்ந்த இலாகாவாகி விட்டது.

எனவே தனது நம்பிக்கைக்கு உரியவரான நரசிம்மராவை அந்த இலாகா மந்திரியாக நியமித்துள்ளார்.

உள்நாட்டு இலாகாவில் இருந்து மாற்றப்பட்டுள்ள பி. சி. சேத்தி இலாகா மாற்றத்தின் போது தனது சொந்த தொகுதியான இந்தூரில் சுற்றுப்பயணம் செய்து கொண்டிருந்தார்.

இந்த இலாகா மாற்றம் பற்றி அவரிடம் நிருபர்கள் கேட்டனர். அதற்கு அவர் அளித்த பதில் விவரம் வருமாறு:-

மந்திரிகளின் இலாகாக்களை எந்த நேரத்திலும் மாற்ற பிரதமருக்கு அதிகாரம் உண்டு.

பஞ்சாப் பிரச்னையை நான் சரிவர கையாளவில்லை என்றும், அதன் காரணமாக நான் மாற்றப்பட்டேன் என்பதும் சரியில்லை.

பிரதமர் இந்திரா காந்தி கூறிய யோசனைகளின் படி சிறந்த முறையில் பஞ்சாப் பிரச்சினை சமாளிக்கப் பட்டது.

பஞ்சாப் பற்றிய ஆலோசனைகளின் போது நான் விலக்கி வைக்கப் பட்டேன் என்பது சரியல்ல இவ்வாறு சேத்தி நிருபர்களிடம் கூறினார்.

இலாகா மாற்றம் பற்றி உங்களுக்கு முன்பே தெரியுமா? என்று கேட்டதற்கு, இன்று காலை கூட பிரதமருடன் நான் டெலிபோனில் பேசினேன். அப்போது கூட இலாகா மாற்றம் பற்றி எனக்கு தகவல் இல்லை என்று சேத்தி கூறினார்.

வெளிநாட்டில் வேலைவாங்கித்தருவதாக

# ரூ. 30 ஆயிரம் மோசடி செய்த டாக்டருக்கு போலீஸ் வலை வீச்சு

சென்னை, ஜூலை. 20- சென்னை வடபழனியைச் சேர்ந்தவர் கந்தசாமி வயது 40. 'இவர்ராஜேஸ்வரி நிறுவனம்' என்ற பெயரில் பாஸ்போர்ட் முதலியவைகள் எடுத்துக் கொடுத்து வந்தாராம். இவரிடம் காஞ்சிபுரத்தை சேர்ந்த பெர்னாண்டோ என்ற டாக்டர் தான் வெளிநாட்டுக்கு ஆள் எடுத்து அனுப்புவதாகக் கூறி வந்தாராம். கந்தசாமியும் 10 பேரிடம் ரூ. 30 ஆயிரம் வசூலித்து கொடுத்தாராம். மீதி பணத்தை பம்பாயில் தருவதாக கூறினாராம். பெர்னாண்டோ 15 பேரை அழைத்துக் கொண்டு பம்பாயில் 3 மாத காலம் தங்கவைத்து விட்டு சென்னைக்கு திரும்ப அழைத்து

(8 பத்தி பார்க்க)

புதுக்கோட்டையில் நடந்த பிரமாண்டமான துவக்கவிழாக் கூட்டம்:

# தமிழகமெங்கும் எம். ஜி. ஆர். இளைஞர் அணி துவங்க வேண்டும்

## செல்வி ஜெயலலிதா எம். பி. முழக்கம்

புதுக்கோட்டை, ஜூலை 20— தமிழகமெங்கும் எல்லா பகுதிகளிலும் குக்கிராமத்தில் கூட இளைஞர் அணி துவக்கப்பட வேண்டும் என, புதுக்கோட்டை மாவட்ட எம். ஜி. ஆர். இளைஞர் அணி துவக்கவிழாவில் கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா எம். பி. கூறினார்.

புதுக்கோட்டை மாவட்ட எம். ஜி ஆர் இளைஞர் அணியின் துவக்கவிழா புதுக்கோட்டை திலகர்திடலில் நடைபெற்றது.

துவக்கவிழாவுக்கு இளைஞர் அணி செயலாளர் அமைச்சர் திருநாவுக்கரசு தலைமைவகித்தார். கழக கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா எம். பி. இளைஞர் அணியை துவக்கி வைத்தார்.

மாவட்ட இளைஞர் அணி துவக்கவிழாவை முன்னிட்டு புதுக்கோட்டை நகரமே திருவிழாக்கோலம் பூண்டிருந்தது.

தெருவெங்கும் பேரறிஞர் அண்ணாவின் திருஉருவம் பொறித்த கழக கொடி தோரணங்கள் பந்தல் போல் கட்டப்பட்டிருந்தன. ஆங்காங்கு பல்வேறு இடங்களில வரவேற்பு வளைவுகளும் பதாகைகளும் கட்டப்பட்டிருந்தன.

புதுக்கோட்டை காங்கிரஸ் பிரமுகர் வேலுசாமி பிள்ளை மற்றும் 200 தி.மு.க வினர் அக்கட்சிகளிலிருந்து விலகி கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா எம்பி முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

மாநாடு போல் நடைபெற்ற மாவட்ட இளைஞர் அணி துவக்க விழாவில் 300 க்கும் மேற்பட்ட இளைஞர் அணியினர் சீருடையில் நின்று மக்கள் கூட்டத்தை ஒழுங்கு படுத்தினர்.

துவக்கவிழா பொதுக்கூட்டத்தில் கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா எம். பி. ரகுபதி, திருமாறன் எம். எல். ஏ. மாரிமுத்து எம். எல். ஏ. வீ. சா. இளஞ்செழியன், அன்பரசன், குணசீலன், ராஜேந்திரன், ஆர். எம். பழனியப்பன். புலவர் பொன்னம்பலம், அரிமழம் சுந்தர ராஜன், அச்சகம் ராஜகோபால், பன்னீர் செல்வம், சென்னை மாவட்ட இளைஞர் அணி பாபு ஜிகவுதம், ப. ஆராஜேந்திர சோழா, எம் ஏ. ராஜ்குமார், திருச்சி நல்லுசாமி, புருசோத்தமன், பாட்டா கோபால் மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

புதுக்கோட்டை மாவட்ட எம். ஜி. ஆர். இளைஞர் அணியை துவக்கி வைத்து கழக கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா எம். பி. பேசுகையில் கூறியதாவது:-

புதுக்கோட்டை மாவட்ட எம். ஜி. ஆர். இளைஞர் அணி தொடக்க விழாவில் கலந்து கொள்வதில் நான் பெரு மகிழ்ச்சி அடைகிறேன். கழகத் தோழர்களின் ஒத்துழைப்புடன் இளைஞர் அணியினர் இந்த விழாவை மிகச் சிறப்பாக நடத்துகிறார்கள்.

இளைஞர்கள் முன்னின்று நடத்தும் எந்த பணியும் வெற்றி பெறும். ஒரு இயக்கத்தில் தேருக்கு அச்சாணி போன்றவர்கள் இளைஞர்கள். புரட்சித் தலைவரின் பட்டாளமே இளைஞர் பட்டாளம் தான். அதிலும் துடிப்புள்ள திறமை மிகுந்த இளைஞர்கள்.

### கழகத்தில் இணைந்தனர்

மனித வாழ்க்கையில் இளமைக் காலம் தான் சிறந்த காலம் நாளைய மனித இயக்கத்தின் ஆணிவேர் இளைஞர்கள் தான் என்று ரஷ்ய மாமேதைகள் கூறியிருக்கிறார்கள்.

இளைஞர்கள் காட்டாற்று வெள்ளமாக இருக்கக் கூடாது. கால்வாய் வழி ஓடும் சீரான நீர்போல இருக்க வேண்டும்.

அதனால் தான் இன்றைக்கு இளைஞர் அணியினை துவக்கி இருக்கிறோம்.

இளைஞர்கள் மனது வைத்தால அவர்களால் சாதிக்க முடியாதது இல்லை

ஒரு காரியத்தை துவங்கும் முன்பு சந்தேகம் ஏற்பட்டு விட்டால் துவண்டு விடுகிறோம்.

இளைஞர்கள் இது முடியுமா என்று சிந்தித்து வீணடிக்கக்கூடாது. லட்சோப லட்சம் இளைஞர்கள் ஒன்று சேர்ந்தால் மகத்தான சக்தியாக உருவாகி விடுவார்கள்.

இன்னும் எத்தனையோ இளைஞர்கள் கழகத்தில் இணைபதிருக்கிறார்கள். இன்றைக்கு இந்த மேடையில் 200 பேர் தி. மு. கவிலிருந்து விலகி கழகத்தில் இணைந்திருக்கிறார்கள். புரட்சித் தலைவரின் தலைமையில் இணைந்திருக்கிறார்கள்.

### நேர்மைக்கு எடுத்துக்காட்டு

நாட்டின் முன்னேற்ற சக்தியாக இளைஞர்கள் பயன்பட வேண்டும் என்பதற்குத் தான் இளைஞர் அணியை துவக்கி இருக்கிறோம்.

இளைஞர்கள் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு முன்னோடியாக புரட்சித்தலைவர் திகழ்கிறார்.

நேர்மை, கண்ணியம், உழைப்பு, வீரத்திற்கு இலக்கணமாக புரட்சித் தலைவர் திகழ்கிறார்.

அதனால்தான் இதை (இளைஞர் அணி) எம் ஜி. ஆர். இளைஞர் அணி என்று துவக்கி இருக்கிறோம். இந்த அணியின் செயலாளர் பொறுப்பு ஏற்றிருக்கும் திருநாவுக்கரசும் இளைஞர் தான்.

எடுத்த பணியை சிறப்பாக முடிக்க முடியும் என்பதைத்தான் திருநாவுக்கரசு இந்த துவக்க விழாவின் மூலம் காட்டியிருக்கிறார்.

புதுக்கோட்டை மாவட்டத்தில் மட்டுமல்ல, நாட்டின் எல்லா பகுதிகளிலும் குக்கிராமத்தில் கூட இளைஞர் அணி துவக்கப்பட வேண்டும். அதற்கு புதுக்கோட்டை மாவட்டம் எடுத்துக்காட்டாக இருக்க வேண்டும்.

### சத்துணவுக்கு நிதி தாரீர்..

இங்கே எனக்கு மாலை அணிவித்தீர்கள், பட்டாடைகள் கொடுத்தீர்கள், பரிசுகள் அளித்தீர்கள் இதைப்பற்றி முன்பே குறிப்பிட்டிருக்கிறேன். இவைகளெல்லாம் உங்கள் அன்பைக் காட்டச் செய்திருக்கிறீர்கள் உங்கள் அன்பு ஒன்றே போதும் பரிசுகளும் மாலைகளும் தேவையில்லை.

அவைகளுக்காக செலவிடும் தொகையை கழகத்தின் வளர்ச்சி நிதிக்கு கொடுங்கள்; முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவு திட்டத்திற்கு கொடுங்கள்.

வெள்ளி பரிசுகளை வைத்துக்கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன்? இது வரை கொடுத்தவைகளை கோவில்களுக்கு கொடுத்து விட்டேன்.

இந்த துவக்கவிழா பற்றி பத்திரிகைகளில் வந்த விளம்பரங்களைப் பார்த்தேன். அதில் எல்லா அமைப்புகளின் பெயர்களும் குறிப்பிடப்பட்டிருந்தது. ஆனால் மகளிர் அணி பெயரை காணோம். இதற்கு என்ன காரணம் என்று தெரியவில்லை.

இந்த மாவட்டத்தில் மகளிர் அணி செயல்படவில்லையா? அல்லது அதற்கு முக்கியத்துவம் கொடுக்கவில்லையா?

### மகளிர் அணி அமைதல் வேண்டும்

அண்மையில் மாநில மகளிர் அணி செயலாளராக திருமதி பா. வளர்மதி நியமிக்கப்பட்டிருக்கிறார் மகளிர் அணி இங்கே சிறப்பாக அமைய வேண்டும்.

இங்கே பெண்கள் ஆண்களுக்கு சமமாக வந்திருக்கிறார்கள் பொது வாழ்வில் ஈடுபட தாய்மார்கள் அதிகம் முன்வர வேண்டும்

தந்தை பெரியார் பெண் விடுதலைக்காக வாழ் நாளெல்லாம் போராடினார் புரட்சித் தலைவர் ஆட்சியில் பெண்களுக்கு பாதுகாப்பு தரும் சட்டங்கள் இயற்றப் பட்டிருக்கின்றன, அது என்ன என்பதே பலருக்கு தெரியாது.

படித்த பெண்கள் முன் வந்து தங்கள் சகோதரிகளின் முன்னேற்றத்திற்கு பாடுபட வேண்டும்.

இவ்வாறு செல்வி ஜெலலிதா எம் பி கூறினார்

(உரையின் பிற்பகுதி நாளை வரும்)

### உண்மையான தொண்டர்களாக செயல்படுவோம்

திருச்சியில் நிருபர்களுக்கு அளித்த பேட்டியின் போது கழக கொள்கை பரப்பு செயலாளர் செல்வி ஜெயலலிதா எம் பி யிடம் கேட்கப்பட்ட கேள்விகளும் அதற்கு அவர் அளித்த பதில்களும் வருமாறு:-

கே:- கட்சியில் இருந்து தன்னை பிரிக்க சிலர் முயற்சிப்பதாக ஓர் அமைச்சர் கூறியுள்ளாரே?

ப:- அது அவருடைய தனிப்பட்ட கருத்தாக இருக்கலாம். புரட்சித் தலைவர் ஏற்கனவே கூறியபடி இங்கே யாரையும் பிரிக்க வேண்டுமென்ற எண்ணம் யாருக்கும் கிடையாது. புரட்சித் தலைவருக்கும் கிடையாது அதைப் போலதான உண்மையாக புரட்சித்தலைவரை தலைவராக ஏற்றுக் கொண்டு நாங்களெல்லாம் இதய தெய்வம் என்று சொல்லுகிறோம். அப்படி இதய தெய்வமாக ஏற்றுக் கொண்டு அவருடைய உண்மையான தொண்டர்களாக இருந்து செயல்படுகிறவர்கள் யாராக இருந்தாலும் இந்தக் கட்சியிலே யாரையும் யாரும் பிரிக்க அனுமதிக்க மாட்டோம். எல்லோரும் சேர்ந்து இருக்க வேண்டும் என்றுதான் விரும்புகிறோம். நான் கட்சிக்கு வருவதற்கு முன்பு நீக்கி வைக்கப்பட்டவர்களை மீண்டும் கட்சியில் இணைக்கவேண்டுமென்று புரட்சித் தலைவரிடம் எடுத்துக்கூறினேன். கட்சியில் சேர்த்திருக்கிறேன்.

கே:- எஸ், டி, எஸ்.சுக்கும் ஜெயலலிதாவுக்கும் தகராறு ஏற்பட்டதாகவும் அதன் காரணமாக இலாகா மாறறப்பட்டதாகவும் கூறப்படுகிறதே?

ப:- தகராறு எங்கே இருக்கிறது? இலாகா மாற்றம் முதலமைச்சரின் முடிவு.

இவ்வாறு செல்வி ஜெயலலிதா, எம்.பி. கூறினார்.

குடிசை மாற்று வாரியத்தின்

# சிறந்த வடிவமைப்பு: தமிழகத்திற்கு பரிசு

புதுடெல்லி, ஜூலை 20- சிறந்த வடிவமைப்புப் போட்டியில் தமிழக குடிசைமாற்று வாரியம் தயாரித்த திட்டத்திற்கு 3-வது பரிசு தமிழ்நாட்டுக்கு வழங்கப்பட்டது.

குடிசைமாற்று வாரியம் சார்பில் 1983-ம் ஆண்டில் தயாரிக்கப்படும் சிறந்த வடிவமைப்புக்கான பரிசு திட்டம் அறிவிக்கப்பட்டது.

இந்தப் பரிசு திட்டத்தை ஹட்கோ அறிவித்திருந்தது.

இதற்கான பரிசுகளை மத்திய வீட்டு வசதித் துறை துணை அமைச்சர் மல்லிகார்ஜுன் நேற்று வழங்கினார்.

சிறந்த வடிவமைப்புக்கான முதல்பரிசு ரூ. 25 ஆயிரம் இந்தூருக்கு வழங்கப்பட்டது.

இரண்டாவது பரிசு ரூ. 15 ஆயிரம் மகாராஷ்டிரத்துக்கு வழங்கப்பட்டது.

தமிழ்நாட்டு குடிசை மாற்று வாரியம் காமராஜ புரத்தில் தயாரித்த சிறந்த வடிவமைப்புக்காக 3-வது பரிசைப் பெற்றுள்ளது.

இதற்குரிய பரிசுத் தொகை ரூ. 10 ஆயிரம் வழங்கப்பட்டது.

# நமது மேடை

### பாண்டிச்சேரி

பாண்டிச்சேரியில் அண்ணா பவளவிழா கூட்டம் இடம் அண்ணாதிடல் நாள்: 22ந் தேதி மாலை 6 மணி தலைமை ஜெயபாலன், முன்னிலை: ஆறுமுகம் வரவேற்புரை பாபு தெய்வநாயகம், பேசுவோர் அமைச்சர் காளிமுத்து பி.கே. லோகநாதன, வி. பி முனுசாமி, பி. ராமலிங்கம், சின்னதுரை, ராதாகிருஷ்ணன் உமாபதி, கே. எம. இ அமீதுசுலதான் மற்றும பலர்.

இடம்: புதிய பேருந்து நிலையம் அருகில்,

காலம்: 22ம்தேதிமாலை 6-மணி,

தலைவர்: திருமலைஅரிதாஸ்,

பேசுவோர்: என். வி. என். செல்வம், மு. அப்துல்லா, துரை ராஜேந்திரன், எஸ், ஜெயசேகரன் மு சின்னப்பிள்ளை, ஜே. சீத்தாராமன், மற்றும் பலா நன்றியுரை எம். பன்னீர்செல்வம்

### செந்துறை

அண்ணா பவளவிழா கொடியேற்று விழா இடம்: நகரின் பல்வேறு பகுதிகளிலும் தலைமை கொளஞ்சிநாதன், கொடியேற்றுபவர் அமைச்சர் சவுந்தரராசன், நிகழ்ச்சியில் பங்கேற்போர் என். நல்லுசாமி சா. கிருஷ்ணமூர்த்தி, தியாக சுப்பிரமணியன், க. ராமலிங்கம், குமரவேல் பி.சி. ராமலிங்கம், ராமசாமி மற்றும் பலர்.

### பழனி

அண்ணா பவள விழா கூட்டம்.

இடம்: பழனி பட்டத்து விநாயகர் கோவில் தெரு

நாள், 28-ந் தேதி மாலை 7 மணி.

தலைமை: கே. ராஜாங்கம்.

பேசுவோர்:- க. சுப்பு கே குப்புசாமி குமாரசாமி சவுந்திரபாண்டியன் சின்னத்துரை, ஜோதி, மணி ஷேக், மு ஜீவா பி முத்துச்சாமி, கே ராமு, வாசன், பரதன், முத்து மற்றும பலர்.

### திருவாரூர்

திருவாரூர் நகர எம். ஜி. ஆர். மன்ற சார்பில் பொதுக்கூட்டம்,

## ஏல விளம்பரம்

1. S. Bhawarlal Munot, 49, தாமோதரபுரம் சென்னை-20 (24 8-82 முதல் பிப்ரவரி 83 வரை) ஏலத்தேதி 1-8 84 அன்று பகல் 11மணிக்கு (2.) R.G. Sharma, 14, கஜபதி தெரு சென்னை-30 24-8-82 முதல் ஏப்ரல் 83 வரை) ஏலத்தேதி 1-8-84 அன்று பகல் 1 மணிக்கு (3) Guneshmal Devichand Singvi, 24, PTH சாலை, சென்னை-12 (31-12-79க்கு முன்பும் 24-8-82 முதல் மார்ச்சு 83 வரை) ஏலத்தேதி 1-8-84 அன்று மாலை 3 மணிக்கு 4. J. Sohanlal Sowcar, 112, P. M. சாலை பெரவள்ளூர், சென்னை - 82 (24-8-82 முதல் ஆகஸ்டு 83 வரை) ஏலத்தேதி 2-8-84 அன்று பகல் 1 மணிக்கு 5 M-s Budharaj Jain, 11, எஸ். ஆர். பி. கோயில் வடக்குத்தெரு ஜவஹர் நகர், சென்னை-82 (24-8-82 முதல் மார்ச்சு 83 வரை) ஏலத்தேதி 2-8-84 அன்று மாலை 3 மணிக்கு 6. S. Champalal Jain, 147, எல் பி சாலை, சென்னை-41 (31-12-79க்கு முன்பும், 24-8-82 முதல் பிப்ரவரி 83 வரை) ஏலத்தேதி 3-8-84 அன்று பகல் 11 மணிக்கு 7. S Shanthi Bai, 112, பேப்பர் மில்ஸ் சாலை, பெரவள்ளூர். சென்னை-82 (24-8 82 முதல் பிப்ரவரி 83 வரை) ஏலத்தேதி 2-8-84 அன்று மாலை 4 மணிக்கு (8)Bhoopendra&Co, 106 வியாசர்நகர் காலனி, சென்னை-39 (24-8-82 முதல் பிப்ரவரி 83 வரை) ஏலத்தேதி 3-8-84 அன்று பகல் 1 மணிக்கு 9, M Paras mal Jain 23, பொன்னியம்மன் கோவில் தெரு, கொட்டூர் சென்னை-85 (24-8 82 முதல் நவம்பர் 83 வரை) ஏலத்தேதி 3-8 84 அன்று மாலை 3 மணிக்கு 10. Suresh Kumar, 12, மண்ணப்பநாய்க்கன் தெரு, சென்னை - 85 [24-8-82] முதல் மார்ச்சு 83 வரை ஏலத்தேதி 3-8 84 அன்று மாலை 4 மணிக்கு

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன், பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு. அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் M. தரம்சந்த் ஜெயின், 150 சச்சிதானந்தம் தெரு, சென்னை - 12ல மாவட்ட ஆட்சியரின் உத்தரவுப்படி மேற்குறிப்பிட்ட ஏலத்தேதிகளில ஏலம்போடுவார்

## ஏல விற்பனை

1. Manjula Jain, 304 E. H. சாலை சென்னை. 39 (24-8 82 முதல் மார்ச் 83 வரை) ஏலத்தேதி 30-7-84 அன்று பகல் 11-மணிக்கு Sampathraj Jain 17 தாண்ணி தெரு, புரசைவாக்கம், சென்னை-7 (31-12-79க்கு முன்பும், 24-8-82 முதல் மார்ச் 83 வரை) ஏலத்தேதி 30-7-84 அன்று பகல் 1-மணிக்கு 3. Babulal Suganchand Acha, 32. T.V.K. நகர், 2வது தெரு சென்னை-12 (31-12-79 க்கு முன்பும், 24-8-82 முதல் பிப்ரவரி 83 வரை) ஏலத்தேதி 30-7-84 அன்று பகல் 3 மணிக்கு. 4. Parasmal Hagmilal, 62, M.P.M. தெரு, வியாசர்பாடி சென்னை- 39 (24-8-82 முதல் மார்ச்சு 83 வரை) ஏலத்தேதி 30 7-84 அன்று மாலை 4 மணிக்கு 5) Sukanray Mahaveer Chand Jain, 546 P. H. சாலை. அரும்பாக்கம், சென்னை-106 (24-8-82 முதல் மார்ச் 83 வரை) ஏலத்தேதி 31-7-84 அன்று பகல் 11 மணிக்கு 6. Kamala Devi, 396, பூந்தமல்லி நெடுஞ்சாலை, அரும்பாக்கம், சென்னை-106 (31-12-79க்கு முன்பும் 24-8-82 முதல் மார்ச் 83 வரை) ஏலத்தேதி 31-7-84 அன்று பகல் 12 மணிக்கு 7 R. Poonaram, 28, L. B. சாலை, சென்னை-41 (24-8-82 முதல் மார்ச்சு 83 வரை) ஏலத்தேதி 31-7-84 அன்று பகல் 1 மணிக்கு 8 Dhanraj Mittalal Jain, 32, TVK நகர், 2-வது தெரு, சென்னை-12 (31-12 79க்கு முன்பும், 24-8-82 முதல் பிப்ரவரி 83 வரை) ஏலத்தேதி 31-7 84 அன்று பகல் 2 மணிக்கு 9. Mithalal Tejraj Jain 1-A வரதராஜ பெருமாள் கோயில் தெரு. தண்டையார்பேட்டை சென்னை-81 (31-12-79க்கு முன்பும் 24-8-82 முதல் மார்ச் 83 வரை) ஏலத்தேதி 31-7-84 அன்று மாலை 4 மணிக்கு

மேற்படியார் கடைகளில் அடகுவைத்துள்ள பொன், பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு, அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் எம். தரம்சந்த் ஜெயின் 150, சச்சிதானந்தம் தெரு சென்னை- 12ல் மாவட்ட ஆட்சியரின் உத்தரவுப்படி மேற்குறிப்பிட்ட ஏலத்தேதிகளில் ஏலம் போடுவார்.

மத்திய அரசு உத்தரவு: நெல்விலை

# குவிண்டால் ஒன்றுக்கு ரூ. 5 உயர்வு

புதுடெல்லி, ஜூலை 20—1984-85ம் ஆண்டுக்கான சீசனில், நெல் விலை குவிண்டாலுக்கு 5 ரூபாய் உயர்த்தப் பட்டுள்ளது.

மத்திய அரசு வெளியிட்டுள்ள அறிவிப்பு ஒன்றில் தெரிவித்திருப்பதாவது:- 1984-85-ம் ஆண்டிற்கான கொள்முதல் சீசனில நெல் கொள்முதல் விலைகள் ரூ 137 ரூ 141 என உயர்த்தப்பட்டுள்ளது. உயர்ந்தரக நெல்லின் விலை குவிண்டால் ஒன்றுக்கு 145-ஆக இருக்கும்.

விவசாய விளை பொருள் கமிஷனின் சிபாரிசுகளை ஏற்று மத்திய அரசு இந்த விலை ஏற்றத்தை அறிவித்துள்ளது

ஆனால் பல்வேறு மாநில அரசுகளும் இந்த விலை உயர்வு மிகவும் குறைவானது என கருத்து தெரிவித்துள்ளது.

(4-ம் பத்தி தொடர்ச்சி)

வந்தாராம், வெகுநாட்களாகியும் வெளிநாட்டிற்கு அனுப்புவதற்கான அறிகுறி தெரியாததால் சந்தேகப்பட்ட கந்தசாமி மத்திய குற்றப்பிரிவு போலீசில் புகார் செய்துள்ளார்.

போலீஸ் வழக்கு பதிவு செய்து டாக்டர் பெர்னாண்டோவை தேடி வருகின்றனர்.

அமைச்சர் அண்டே அறிவிப்பு:

# தமிழ்நாட்டில் ஒரு லட்சம் பேருக்கு கண் அறுவை சிகிச்சை

சென்னை, ஜூலை, 20— தமிழ்நாட்டில் இந்த ஆண்டு 1 லட்சம் பேருக்கு கண் அறுவை சிகிச்சை செய்யப்படும் என அமைச்சர் அண்டே கூறினார்.

தமிழ்நாடு அரசு உதவி மருத்துவர்கள் சங்க சென்னை மாவட்டகிளையின் மாநாடு சென்னை மருத்துவ கல்லூரியில் நடைபெற்றது. இதில் மக்கள் நல்வாழ்வு துறை அமைச்சர் டாக்டர். எச். வி. அண்டே கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றினார்.

அமைச்சர்பேசும்போது கூறியதாவது:-

சென்னை மாவட்ட உதவி மருத்துவ சங்கத்தின் அங்கத்தினர்கள் பேசும்போது பல கோரிக்கைகளை என் முன் வைத்துள்ளார்கள். இதில் பல பிரச்னைகள் இருப்பினும் அரசு அதில் கண்ணும் கருத்துமாய்செயலாற்றும் உதவி மருத்துவர்களுக்கு பல்கலைக் கழக மானிய குழு சிபார்சின் அடிப்படையில் ஊதியஉயர்வு அளிக்க தமிழக அரசு தீவிரமாக பரிசீலித்து வருகிறது. இதை இப்போது கூறி விளம்பரப்படுத்த விரும்பவில்லை. நிச்சயம் கூடிய விரைவில் சம்பள உயர்வு கிடைக்கும்.

மாவட்ட தலைமை மருத்துவ மனைகளில் சிவில் சர்ஜன்கள் அதிகம் தேவை என்பது மிகவும் முக்கியமான பிரச்னை தான். ஆகவே ஒவ்வொரு மாவட்ட தலைமை மருத்துவமனைகளிலும், மருத்துவ துறையிலும், அறுவை சிகிச்சை முறையிலும் சிறந்து விளங்கும் நிபுணர்களை நியமிக்க உள்ளோம்.

கண்மற்றும்குழந்தைகள் சிகிச்சை உதவி மருத்துவர்கள் 30 பேரை தலைமை மருத்துவ பதவிக்கு உயர்த்த இருக்கிறோம். இந்த ஆண்டு மட்டும் சுமார் 1 லட்சம் பேருக்கு கண் அறுவை சிகிச்சை செய்ய தமிழக அரசு திட்டமிட்டுள்ளது.

குழந்தைகளின் நலனை கருத்தில்கொண்டுதமிழக அரசு எல்லா மாவட்ட மருத்துவ மனைகளிலும் குழந்தை மருத்துவ நிபுணர்களை நியமிக்க உள்ளது. இதன் மூலம் குழந்தைகளின் இறப்பு விகிதம் குறைவதோடு, குழந்தைகளின் சுகாதார வசதியும் பெருகும்.

20 வருட காலமாகஉதவி மருத்துவர்களாகவே பணிபுரிய வேண்டியுள்ளது பதவி உயர்வு தேவை என்பது மிகவும் சிக்கலான பிரச்னை பதவி உயர்வு தருவதில் பலவித பிரச்னைகள இருப்பதால் என் சக்தி முழுவதையும் பயன் படுத்தி உங்களின் நலன் என்ற முறையில் நான் தமிழக முதல்வரிடம் எடுத்துக்கூறி பரிசீலிப்பேன்.

மருத்துவ துறையில் பணியாற்றினால் அனைவரையும் திருப்தி படுத்த முடியாது. எவ்வளவுதான் உழைத்தும் நல்ல காரியங்கள் பலசெய்தும் பாராட்டு இல்லை என்று வருத்தப்பட வேண்டாம்.

மருத்துவர்கள் ஓய்வு பெறும் போது பதவி நீடிப்பு தரக்கூடாதுஎன்று கூறியுள்ளீர் இது வரை யாருக்கும் அந்த மாதிரி தரவில்லை இனியும் யாருக்கும் அந்த முறை பின்பற்ற முடியாது அதில் அரசு தனி கவனம் செலுத்தும்.

ஆகவே பொது மக்களுக்கு சேவைசெய்ய வந்த மருத்துவர்கள் மக்களோடு நெருங்கி பழகினால் இன்று இல்லாவிட்டாலும் நாளை புகழுவார்கள்.

இவ்வாறு அமைச்சர் பேசினார்.

மாநாட்டில் நல்வாழ்வுத் துறை செயலர் ந. சண்முகம், மருத்துவ கல்வித் துறை இயக்குனர் லலிதா காமேஸ்வரன், சென்னை மருத்துவ கல்லூரி முதல்வர் ஆறுமுகம். தமிழ்நாடு உதவி மருத்துவ சங்க தலைவர் கிருஷ்ணகுமார். பொன்னுதுரை ஆகியோர் பேசினார்கள்.

---

தமிழ் நாடு மின்சார வாரியம்

எண்ணூர் அனல் மின் நிலையம் - எண்ணூர் சென்னை

## ஒப்பந்த விளம்பரம்

ம். 2 காண்ட்ராக்ட்

கீழே குறிப்பிட்டுள்ள வேலைக்காக அரக்கு முத்திரையிட்ட ஒப்பந்தங்கள வரவேற்கப்படுகிறது.

வேலை விபரங்கள்:

எண்ணூர் அனல் மின் நிலையத்தில் உள்ள கரி கடத்தலும் அதன் உபகரணங்களில் சுற்றிலும் விழும் நிலக்கரித் துணுக்குகள் மற்றும் தூசகளை தினமும் சுத்தம் செய்து அப்புறப்படுத்துதலுக்கு ஒரு வருடத்திற்கான ஒப்பந்தம்.

விவரக்குறிப்பு எண்: எஸ். -எம்.எம்.-68

ஒப்பந்தப்பிரதியின்விலை: தமிழ்நாடு மட்டும் ரூ. 10- தமிழ்நாடுதவிர்த்து மாநிலங்களுக்கு ரூ 11- (வரிகள் உட்பட)

வைப்புத் தொகை: ரூ 5,000- (ரூபாய் ஐந்தாயிரம் மட்டும்)

ஒப்பந்தம் பெற்றுக் கொள்ளும் கடைசி நாள்: 31 7-84 12.00 மணி வரை டெண்டர் படிவங்கள் வேண்டுவோர் அந்தந்த வேலைக்கு எதிராக குறிப்பிட்ட தொகையைப் பண அஞ்சல் (மணி ஆர்டர்) மூலமோ அல்லது நேரிலோ விளக்க விவர எண்ணையும் சுய முகவரியையும் தெளிவாகக் குறிப்பிட்டு கணக்கு அலுவலர்- இயக்கு தல வட்டம்- ஏ.ஓ.எ.அ.மி.நி- எண்ணூர்சென்னை-600057 என்ற முகவரியில் செலுத்தி அவர் அலுவலகத்திலிருந்து பெற்றுக் கொள்ளலாம் அஞ்சல் மூலம் அனுப்பப்படும் டெண்டர் படிவங்கள் உரியவர்கட்குச் சேரா விட்டாலோ தாமதமாக போய் சேர்ந்தாலோ அதற்கு மின்சார வாரியம்பொறுப்பல்ல.

வைப்புத்தொகை கட்டிய ரசிதை டெண்டருடன் இணைத்து அனுப்ப வேண்டும். அவ்வாறு ரசிது இணைக்கப்படாத டெண்டர்களும் தமிழ்நாடு மின்சாரவாரியத்தின் டெண்டர படிவங்களில் சமர்ப்பிக்கப் பெறாத டெண்டர்களும் மேற்குறிப்பிட்ட நாள் நேரத்திற்குள் சமர்ப்பிக்கப் பெறாத டெண்டர்களும் நிராகரிக்கப்படும். டெண்டர் படிவங்கள் திறக்கப்படும் நாள் அன்று விற்பனை செய்யப்பட மாட்டாது. சமர்ப்பிக்கப்பட்டடெண்டர்களை சம்பந்தப்பட்ட டெண்டர்களில் வந்தவர்கள் முன்னிலையில் திறக்கப்படும். டெண்டர் ஏற்கும் அதிகாரி எந்த ஒரு டெண்டரையோ அல்லது எல்லா டெண்டர்களையும் ஏற்கவோ அல்லது எவ்வித காரணமும் காட்டாது நிராகரிக்கவோ உரிமை பெற்றவராவார். டெண்டர்தாரர்கள் வைப்புத் தொகையை குறிப்பிட்டதேதியில் காலை 11-00 மணிக்குள் செலுத்தி விட வேண்டும்.

மேற்பார்வை பொறியாளர்
சீரமைப்பு

டெலக்ஸ்: 7113
தொலைபேசி: 554926
கிராம்: எண்டர்மல்

செ. இ. பி. ஆர் - 35098
84-15 (ஆர்)

---

## கழகதோழர் மரணம்

வியாசர்பாடி ஜூலை20 வியாசர்பாடி 22வதுவட்ட இதயக்கனி எம். ஜி. ஆர். மன்ற உறுப்பினர் எஸ். ஏகாம்பரம் (வயது 26) காலமானார்.

80-வது பிளாக் சத்தியமூர்த்தி நகரில் இருந்து புறப்பட்ட இறுதி ஊர்வலத்தில் வட்டத்துணைச் செயலாளர் சாலை லோகநாதன் தலைமையில்பலர் கலந்துகொண்டு அஞ்சலி செலுத்தினர்.

---

# கணேஷ் - காமதேனு லாட்டரி முடிவுகள்

### கணேஷ்

புதுடெல்லி ஜூலை 20- கணேஷ் லாட்டரியின் 27-வது குலுக்கல் நேற்று நடந்தது முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
ரூ.1 லட்சம்
ஜி சி 729398

இதே எண்கள் உடைய மற்ற வரிசை சீட்டுகளுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ. 1000 உண்டு.

2- வது பரிசு
தலா ரூ. 10 ஆயிரம்
ஜிஎ 831106
ஜிபி 881715
ஜிஜி 695728

(கீழ்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசைசீட்டுகளுக்கும் பரிசு உண்டு)

3- வது பரிசு
(ரூ 500) 29398

4-வது பரிசு
(ரூ. 100) 9398

5 வது பரிசு
(ரூ. 20) 398

6-வது பரிசு
ரூ 10 98

7- வது பரிசு
ரூ 4 8

7-வது பரிசு
தலா ரூ. 10
067 541 164 627 288
736 345 883 429 946

8- வது பரிசு
தலா ரூ. 5
038 216 080 303 145
319 142 402 23 439
579 708
549 828 638 892 671
983 742 929

விற்பனையாளர் பரிசு
(ரூ. 5) 06

### லக்கி வீக்லி

லக்கி வீக்லி லாட்டரியின் 77-வது குலுக்கல் நேற்று நடந்தது முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
ரூ 1 லட்சம்
எச் 622628

இதே எண்கள் உடைய மற்ற வரிசை சீட்டுகளுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ 1000 உண்டு

2- வது பரிசு
தலா ரூ. 20 ஆயிரம்
ஐ 298459
ஜி 464740
எச் 285485

3-வது பரிசு
தலா ரூ. 10 ஆயிரம்
ஐ 275312
ஜி 610997
எச் 644783

(கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு)

4-வது பரிசு
தலா ரூ. 500
63470 04505 65636
31689 54722 94948
72853 66205 74503
81054

5- வது பரிசு
தலா ரூ. 50
9629 0096 7240 9398
7649 7066 3271 7750
4973 2680

6- வது பரிசு
தலா ரூ 20
3107 3475 4753 0522
4879 7013 8922 6159
5435 3841

### காமதேனு

புதுடெல்லி, ஜூலை 20- காமதேனு லாட்டரியின் 257-வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
(ரூ. 1½ லட்சம்)
கே. டி. வி 558398

இதே எண்கள் உடைய மற்றவரிசை சீட்டுகளுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ 1000 உண்டு

2-வது பரிசு
தலா ரூ 10 ஆயிரம்
கேடிடி 564343 302062
கேடியூ 582328 510852
கேடிவி 312102 559942

(கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லாவரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.)

3-வது பரிசு
(தலா ரூ 1000)
63305 54694 67027
59842 84521 15412
73935 22978 53672
87471

4-வது பரிசு
தலா ரூ. 100
6179 9205 2667 7325
5368 6187 7227 8673
5655 9532

5- வது பரிசு
தலா ரூ 50
6881 8959 7194 0274
7025 1173 5328 8655
6967 4152

6-வது பரிசு
தலா ரூ. 20
4341 9602 2112 7382
6324 5247 6572 0473
7427 7324 4229 0240
6345 3638 6571 2017
8072 7195 4435 7373

7- வது பரிசு
தலா ரூ 10
885 375 913 197
308 922

ஏஜெண்டுகள் பரிசு
தலா ரூ. 50
கேடிடி 0573
கேடியூ 0275
கேடிவி 9724

விற்பனையாளர் பரிசு
தலா ரூ. 50
கேடிடி 3735 2764
கேடியூ 7721 9587
கேடிவி 2635 9358

---

# வீடியோ காசட்டை முட்டையாக கட்டி தூக்கிச் சென்ற ஆசாமிகள்

திருச்சி, ஜூலை. 20- வீடியோ காசட்டுகளை முட்டைக்குள் வைத்து கட்டிச் சென்ற ஆசாமிகள் சுங்க இலாகா அதிகாரிகளைப் பார்த்தவுடன் முட்டைகளை கீழே போட்டு விட்டு தப்பி ஓடினர்.

இச்சம்பவம் பற்றிகூறப்படுவதாவது-

தஞ்சை மாவட்டம் தம்பிக் கோட்டை கடலோரப் பகுதியில் சில ஆசாமிகள் தலையில் முட்டைகளை சுமந்த வாறு சென்றனர்.

அப்போது அவ்வழியாக சுங்க இலாகா அதிகாரிகள் ரோந்து வந்தனர்.

சுங்க இலாகா அதிகாரிகளைக் கண்டவுடன் அந்த ஆசாமிகள் முட்டைகளைப் போட்டுவிட்டு தப்பி ஓடினர்.

அந்தமுட்டைகளை அதிகாரிகள் பிரித்துப்பார்த்த போது அதில் வீடியோ காசட்டுகள், மற்றும் ஜிப்புகள் இருந்தது தெரியவந்தது.

ஆனால் அதற்குள், முட்டைகளை சுமந்து வந்த ஆசாமிகள் தப்பி ஓடிவிட்டனர்.

திருச்சி சுங்கம் மற்றும் மத்திய எக்சைஸ் கலெக்டர் திருமதி வரலட்சுமி ராஜமாணிக்கம் உத்தரவின் பேரில் அதிகாரிகள் மேற்கொண்டு விசாரணை நடத்தி வருகிறார்கள்.

---

# எண்ணூர் அனல்மின நிலையத்தை புதுப்பிக்க அனுமதி

சென்னை, ஜூலை 20- எண்ணூர் அனல் மின் நிலையத்தைப் புதுப்பிக்கும் திட்டத்திற்கு திட்டக் கமிஷன் அனுமதி அளித்துள்ளது.

கொதிகலன், குழாய்கள் குளிர்நீர் அமைப்பு சாம்பல் கையாளும் அமைப்பு, நீர் பதப்படுத்தும் ஆலை, நிலக்கரியை எடுத்துச் செல்லும் முறை மின் சாரகருவிகள் ஆகியன புதுப்பிக்க அல்லது நவீனப் படுத்தப்படும்.

தேங்கும் நீரை வாரவும் புதியதூர் வாரியைவாங்குவதற்கும்திட்டத்தில்வகை செய்யப்பட்டுள்ளது

இத்திட்டத்தின் மதிப்பு ரூ.37.64 கோடியாகும்.

---

# முக்கியமான 7 மருந்துக்கு விலை குறைப்பு

ஐதராபாத்,ஜூலை 20- முக்கிய மருந்துகள் ஏழின் விலை குறைக்கப் பட்டுள்ளதாக மத்திய அமைச்சர் வசந்த்சாத்தே அறிவித்தார்.

10 சதவிகிதம் முதல்12 சதவிகிதம் வரை இந்த7 மருந்துகளின் விலை குறைக்கப்படுகிறது. இது உடனேயே அமலுக்கு வரும் என்று அவர் அறிவித்தார்.

---

# கர்நாடக முன்னாள் அமைச்சர் மரணம்

பெங்களூர். ஜூலை 20- கர்நாடக மாநில முன்னாள் அமைச்சர் தயானந்த சாகர் இன்று மாரடைப்பால் காலமானார்.

அவருக்கு வயது 62 அவருக்கு மனைவியும். இருமகள்களும் உள்ளனர் இவர் கர்நாடகத்தில் பட்டு வளர்ப்புத்துறை அமைச்சராக இருந்தவர்.

---

திரைப்பட அரங்குகளில்

# கட்டண உயர்வு: அரசு விளக்கம்

சென்னை, ஜூலை 20- அரசு வெளியிட்டுள்ள பத்திரிக்கை குறிப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளதாவது:-

அண்மையில்திரைப்பட அரங்குகளில் நுழைவுக் கட்டணங்களை உயர்த்துவது பற்றி அரசு ஆணை பிறப்பித்து உள்ளது. மேற்படி அரசு ஆணையில் பலதரப்பட்ட இடங்களில் உள்ள வெவ்வேறு வகையான திரைப்பட அரங்குகளில் அதிக பட்சம் எந்த அளவுக்கு கட்டணங்களை உயர்த்தலாம் என்று கோடிட்டுக் காட்டப்பட்டு உள்ளது.

தவிர மேற்படி அரசு ஆணை உடனடியாக கட்டண உயர்வுக்கு இடம் தரவில்லை. அவ்வரசு ஆணையில் கூறப்பட்டுள்ளது அனுமதிக்கப்பட்ட உச்ச கட்டணங்களே தவிர உயர்த்தப்பட்ட கட்டண விகிதங்கள் அல்ல. எந்த தனிப்பட்ட திரை அரங்கும் இவ்வரசு ஆணையை அடிப்படையாககொண்டு உடனடியாகக் கட்டணங்களை உயர்த்தமுடியாது.

உரிமம்வழங்கும் அதிகாரிகளான மாவட்ட ஆட்சித் தலைவர்கள், சென்னை மாநகராட்சி, காவல் துறை ஆணையர் ஆகியோரிடம் மனுச் செய்து ஆணை பெற்றபிறகே மேற்படி உச்சவரம்புக்கு உட்பட்டு திரைப்பட அரங்கங்களின் தகுதிக்கு தகுந்தவாறு கட்டணங்களை உயர்த்த இயலும்.

எந்த ஒரு திரை அரங்கும் கட்டணங்களை உயர்த்தாமலேயே தற்போதுள்ள கட்டணங்களையே தொடர்ந்து வசூலிக்கவும் மேற்படி அரசு ஆணை இடம் தருகிறது.

கட்டணஉயர்வுசெய்தே ஆகவேண்டும் என்ற கட்டாயம் ஏதும் இல்லை அப்படிக் கட்டணம் உயர்த்தப்படுவதற்கு உரிமம் வழங்கும் அதிகாரிகள் அனுமதி வழங்கும் போது கட்டணம் உயர்த்தும் திரை அரங்குகள் அமைந்துள்ள இடம் (பெருநகர், நகர்ப்புறம், கிராமப்புறம்) அரங்குகளின் தன்மை, மக்களுக்கு இவ்வரங்குகள் தரும் வசதிகள் போன்றவற்றைக் கருத்தில்கொண்டு, பிறகே கட்டண உயர்வுக்கு அனுமதி வழங்குவார்கள் என்பது தெளிவுபடுத்தப் படுகிறது.

---

கழகக்கொடிமரங்களை வெட்டி

கழகத் தொண்டர்களைத் தாக்கும் தி.மு.க.வினர்

# வன்முறை மூலம் எதையும் சாதித்து விட முடியாது

முதல்வர் புரட்சித்தலைவர் எச்சரிக்கை

தேனி. ஜூலை. 20- தேனியில் கூட்டுறவு நூற்பாலைதிறப்புவிழாவில் பங்கேற்றுப் பேசுகையில் முதல்வர் புரட்சித் தலைவர் கூறியதாவது:-

நாங்கள் செய்து வரும் திட்டங்கள் ஓட்டு வாங்குவதற்காகஎன்று சிலர்கூறுகின்றனர். ஓட்டுக்காக திட்டங்களை துவங்கி தேர்தலுக்கு பின் நிறுத்தி விடுவோம் எனக் கூறுகின்றனர்.

எங்கள் கட்சி துவங்கி 12 ஆண்டுகள் ஆகிறது, 2 தடவை எங்களை ஆட்சியில் உட்கார வைத்தீர்கள். என்மீதுள்ள நம்பிக்கையில்தான் எங்களை ஆட்சியில் அமர்த்தினீர்களே தவிர வேறல்ல.

முதலில் (1977ல) ஆட்சிக்கு வந்தபோது எதிர்க்கட்சியினர் அரசுக்கு இடையூறு விளைவிப்பதற்காக தினமும்போராட்டங்களை நடத்திக் கொண்டிருந்தனர். எனவே திட்டங்களில் சரியாக கவனம் செலுத்த முடியாத நிலை ஏற்பட்டது.

அமைதி இருந்தால் தான் திட்டங்களில்கவனம் செலுத்த முடியும்.

1977ல் எங்களுக்குதந்த இடங்களை விட 1980ல் அதிக இடங்களை தந்தீர்கள். அண்ணாவின் கொள்கை அடிப்படையில் தொடர்ந்து கடமையாற்றுவோம்.

## குடிநீர்த் திட்டம்

தேர்தலில் சொல்லாத சத்துணவு திட்டம், தன்னிறைவு திட்டம் போன்றவற்றையும் செயல்படுத்துகிறோம். சாலைவசதி இல்லாத பகுதிகளுக்கும் உடனே ஏற்படுத்தி தர உத்தரவிட்டுள்ளேன்.

முன்பு ஒரு அதிகாரியை அழைத்து தன்னிறைவுத் திட்டம், குடிநீர் திட்டம் எப்படி உள்ளது என்று கேட்டேன். உடனே அவர் 375 ஊராட்சி ஒன்றியத்திற்கு முதலில் கொடுத்து விட்டு பின் கிராமங்களுக்குத் தரலாம் என்றார்.

கிராமங்களுக்குஉடனடியாக தரவேண்டுமென்று நான் கூறினேன். இப்படி சில அதிகாரிகள் இருந்தனர்.

ஆனால் இப்போது அப்படிப்பட்ட அதிகாரிகள் இல்லை. அடித்தள மக்கள்பயன் கருதி செயல்படக் கூடியவர்களாயுள்ளனர்.

## குடும்பவிழா

ஆண்டிபட்டியை ஆண்டவனே கைவிட்டு விட்டான் என்றார்கள். முன்பு ஆண்டவர்கள் சரியாக கவனிக்கவில்லை. முன்பு ஆட்சி செய்தவர்கள் சொன்னதை செய்யாததால் அவர்களுக்கு என்ன நிலை ஏற்பட்டது என்பதைமனதில் கொண்டு செயல்பட வேண்டும்.

ஓட்டுப் போட்ட மக்களுக்கு கடமையாற்ற வேண்டும் என்ற உணர்வு வேண்டும் மக்களுக்கு துரோகம் செய்யாது கடமையாற்றவேண்டும்.

8 மாவட்டங்களை துவக்கினோம் விழா அமைதியாக எழுச்சியாக நடைபெற்றது. சிறு அசம்பாவிதம் கூட நடைபெறவில்லை. அந்த அளவு மக்கள் குடும்ப விழாவாக நினைத்து வந்தனர்.

மாணவர்கள் அரசியல் கட்சிகளில்ஈடுபாடுகொள்ளக் கூடாது.

எங்கள் கட்சியிலும் மாணவர் அணி உள்ளது அதன் தலைவராக காளிமுத்து உள்ளார்.

அவரிடம் நீங்கள்மட்டும் தமிழ்வித்தகராக இருந்தால் போதாது. அதுபோல மாணவர்களையும் நல்ல நிலைக்கு உருவாக்க வேண்டுமென்று கூறியிருக்கிறேன். இளைஞர் அணியும் உள்ளது. நல்ல போதனைகளை கற்றுத் தர அவர்களிடமும் கூறியுள்ளேன்.

சமீபத்தில்நடந்தஇடைத் தேர்தலில் சென்னையில் நிறையகள்ளஓட்டுபோடப் பட்டுள்ளது. அவரவர் ஓட்டை அவர்களே போடும் உரிமை வேண்டும். கள்ள ஓட்டு ஜனநாயகம் ஆகாது.

ஓட்டுரிமையைமக்களும் வீணாக்கக்கூடாது. சாதி மதபேதமின்றி மக்கள் வாழவேண்டும்.

ஒருவரை நம் கருத்தை சொல்லிநம்பக்கம்இழுக்க வேண்டுமேயன்றி வன்முறை கொண்டு இழுக்க முயலக்கூடாது' அதுபயனையும் தராது.

## கொடியை வெட்டுவதால் கொள்கை அழிந்துவிடாது

சந்திரமோகன் நாடகத்தில் 'ஒருவாளால் ஆயிரம் தலைகளை வெட்டி விடலாம். ஆனால் ஆயிரம் வாட்களால் 1 மனிதனின் உள்ளத்தை மாற்றி விட முடியாது' என்று அண்ணா கூறுவார்.

அதுபோல் வன்முறையால் எதையும் சாதித்து விட முடியாது.

எங்கள் கட்சி கொடிகளை வெட்டுகின்றனர், தொண்டர்களை அடிக்கின்றனர். கொடியை வெட்டுவதால் கொள்கை அழிந்து விடாது.

சகோதர உணர்வுடன் எல்லோரும் பழக வேண்டும். ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற அண்ணாவின் கொள்கைப் படி தொடர்ந்து உங்களுக்காக பாடுபடுவேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

## நள்ளிரவிலும் மக்கள் வெள்ளம்

முதல்வர் புரட்சித் தலைவர் பங்கேற்ற கூட்டுறவு நூற்பாலை தொடக்கவிழா நிகழ்ச்சி நள்ளிரவுக்கு மேல் முடிந்தது. திருவிழா போல் மக்கள் வெள்ளம் திரண்டிருந்தது நள்ளிரவிலும் ஏராளமான பெண்களும், பெரியவர்களும் கூடியிருந்து புரட்சித் தலைவரின் பொன்னுரை கேட்டனர்.

மதுரையிலிருந்து தேனி வழி நெடுக புரட்சித் தலைவரைக் காண ஆங்காங்கே மக்கள் கூடியிருந்து உற்சாகமாக வரவேற்றனர். தேனிஆண்டிபட்டி பகுதியே புரட்சித் தலைவர் வருகையையொட்டி புத்துணர்வு பெற்று விளங்கியது.

---




PUBLISHED BY K. RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D.M.K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34, NELSON MANICKAM ROAD MADRAS-600029

Editor E. PARASURAMAN